







தென்காசி அருள்மிகு உலகம்மன் உடனுறை விசுவநாத சுவாமி ஆலயத் திருக்குட நீராட்டுவிழா 25.6.90 அன்று வெகு விமரிசையாக நடைபெற்றது. பாண்டிச்சேரி மாநில மேதகு ஆளுநர் சந்திராவதி அம்மையார், மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு கே.பி. கந்தசாமி எம்.ஏ., மாண்புமிகு கைத்தறித்துறை அமைச்சர் திருமிகு தங்கவேலு, ஆணையாளர் திருமிகு வ. ராமதாஸ் ஐ.ஏ.எஸ்., திருப்பணிக்குழுத் தலைவர் திரு பா. சிவந்தி ஆதித்தன் மற்றும் முக்கிய பிரமுகர்கள் பலரும் பங்கேற்றனர்.

முகப்பு:

சேலம் குகை

அருள்மிகு மாரியம்மன்

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி நெடுஞ்சாலை,
சென்னை — 600 034.
தொலைபேசி எண்: 479407

ஆசிரியர்:
கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.

| மாலை : 32 | திருவள்ளுவர் ஆண்டு 2021 பிரமோதூத ஆண்டு ஆவணி<br>ஆகஸ்ட் 1990 விலை ரூ. 3-00 | மணி : 8 |
|---|---|---|

## திருக்கோயில் வாசகர்களுக்கு அறிவிப்பு

அன்பு வாசகர்களே ! வணக்கம்

திருக்கோயில் திங்கள் இதழின் உறுப்பினர் களாகச் சேர விருப்பம் உள்ளவர்கள்

**உயர்திரு ஆணையர் அவர்கள்**
**இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை**
**சென்னை — 600 034**

என்ற முகவரிக்கு பணவிடை அல்லது வங்கி வரைவோலை மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**சந்தா விவரம்**

| | | | |
|---|---|---|---|
| அரை ஆண்டு | — | ரூ. | 18-00 |
| ஓர் ஆண்டு | — | ரூ. | 36-00 |
| ஆயுள் | — | ரூ. | 300-00 |

சந்தாதாரர்கள் முழுமுகவரியைத் தெரிவிக்க வேண்டும்.
முகவரியில் மாற்றம் இருப்பின் உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

**எல்லா ஊர்களுக்கும் முன் பணம் கட்டும் விற்பனையாளர்கள் தேவை.**

## பொருளடக்கம்



இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு

# "மான் ஓடிவந்ததே கண்டீர்களா?"



## மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள்



வழக்கம்போல் வள்ளுவர் தம் மாணாக்கனுக்குத் தமிழ் இலக்கணம் கற்றுக் கொடுக்கும் நேரம். அவரது அகன்ற நெற்றியில் தேக்கப்பட்ட சிந்தனைப் பெருவெள்ளம் ஒளிவீசி மடைகளின் வழியாகப் பாய்ந்து கொண்டிருந்தது.

அப்போது அழகிய மான் குட்டியொன்று அச்சத்தால் நடுக்குற்றுத் தன் இனத்துக்குரிய இயல்பான வேகத்தை இரட்டிப்பாக்கிய வண்ணம் வள்ளுவரின் குடிலுக்குள் ஓடிஒளிந்து கொண்டது.

குறளாரின் குளிர்ப்பார்வை அந்த இளம் மானின் மீது படுவதற்குள் வில்லும் அம்பும் தாங்கிய வேடன் ஒருவன் விரைந்து வந்து வள்ளுவருக்கெதிரே நின்றான்.

''இந்தப் பக்கம் ஒரு மான் ஓடி வந்ததே! கண்டீர்களா? கண்டிருந்தால் சொல்லிவிடுங்கள். அது என் அம்புக்குத் தப்பியமான். ஒருவேளை உமது இல்லத்திற்குள் நுழைந்து விட்டதோ?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

வள்ளுவர் அமைதியாகச் சொன்னார்: ''மானா? இந்தப் பக்கம் வரவில்லையே; அதோ! அந்தப்பக்கம் அல்லவா சற்று நேரத்துக்கு முன் ஒருமான் துள்ளியோடியது.''

இந்தப் பதிலைக் கேட்டதும் வேடன் ''அப்படியா?'' என்று கூவியவாறு அவர் காட்டிய திக்கு நோக்கி ஓடத் தொடங்கினான்.

மாணாக்கன் மிகப் பணிவுடன் வள்ளுவரைப் பார்த்துக் கேட்டான். ''பெருந்தகையீர்! பொய் கூடாது, அது பெருந்தீது என்று பல முறை விளக்கியிருக்கிறீர்களே, இன்று தாங்களே அந்த வேடனிடம் ஒரு பொய் கூறினீர்களே, சரிதானா? ''

வள்ளுவர் புன்னகை புரிந்தவாறு விடையளித்தார். ''கேடு இல்லாத நன்மையை விளைவிக்கக் கூடிய பொய்யான சொல் வாய்மை என்று கூறத்தக்க இடத்தைப் பெற்று விடும். நான் வேடனிடம் உண்மையைச் சொல்லியிருந்தால் அந்தப்புள்ளிமானின் உயிர்போயிருக்கும் அல்லவா! நான் கூறியது பொய்யானது. எனினும் அது ஒரு நன்மையைச் செய்த காரணத்தால் வாய்மையாகவே கருதப்படும்.

வள்ளுவர் இந்த விளக்கத்தைச் சொல்லி முடித்துவிட்டு எதிரேயிருந்த ஏட்டையும் எழுத்தாணியையும் எடுத்தார். குறள் உருவாயிற்று.

''பொய்ம்மையும் வாய்மை இடத்த
புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்'' (குறள் 292)

அதனைத் தொடர்ந்து மாணாக்கனிடம் கூறினார்.

''இளைஞனே! இந்த விளக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு பொய் சொல்லுவதையே வாழ்க்கையாக ஆக்கிக்கொண்டு விடக்கூடாது! ஒருவன் தன் நெஞ்சம் அறிந்த உண்மையை மறைத்துவிட்டுத் தன்னைச் காத்துக் கொள்ளவோ அல்லது பிறருக்குக்

கேடு சூழுவோ பொய் கூறுவானே யானால் அப்படிப் பொய் கூறியவனுடைய நெஞ்சமே அவனைச் சுட்டுப் பொசுக்கிவிடும். அதனைக் குறிப்பிடவே இந்தக் குறளையும் எழுதியிருக்கிறேன்.

''தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும்.''

(குறள் 293)

வள்ளுவரின் அருமைமிகு கருத்துகளைக்கேட்டு மகிழ்ந்த மாணாக்கன் அவர் கால்மலர் தொழுது நின்று ''வாழ்க வள்ளுவம்'' என்று முழங்கினான்.

**—மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் ''குறளோவியக்'' காவியத்திலிருந்து இக்கருத்தோவியம் நன்றியுடன் எடுத்து வெளியிடப்படுகிறது.**



## உங்கள் ஒத்துழைப்பு தேவை

கலைஞர் தலைமையில் இயங்கும் தமிழக அரசு அறநிலையத் துறைக்குக் கடந்த ஆண்டு கோயில்கள் மூலம் வருமானம் ரூ. 40 கோடி ரூபாய். இந்த ஆண்டு வருமானம் ரூ. 52 கோடியாக உயர்ந்து இருக்கிறது. சமுதாய நலத் திட்டங்களுக்கும் கோயில் வருவாய் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற எண்ணத்தை அரசு கொண்டுள்ளது.

இப்போது அறநிலையத் துறையால் 6 கலைக் கல்லூரிகள் நடத்தப்படுகின்றன. இன்னும் 5, 10 ஆண்டுகளில் மேலும் 10 கல்லூரிகள் ஆரம்பிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. தென்தமிழகத்தில் ஒருமருத்துவக்கல்லூரியும், வட தமிழகத்தில் ஒரு மருத்துவக் கல்லூரியும் தொடங்கத் திட்டமிட்டு உள்ளோம்.

அறநிலையத்துறை மூலம் ஆதரவற்ற விதவைகளுக்கும், அனாதைகளுக்கும் பழநி, மதுரை, தஞ்சை, திருச்செந்தூர், சென்னை ஆகிய 5 இடங்களில் மறுவாழ்வு இல்லங்கள் அமைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

அதற்கு உங்கள் ஒத்துழைப்பு தேவை.

—மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்
**கே.பி. கந்தசாமி, எம்.ஏ.**

# குருவருளும் திருவருளும்



ஆணையாளர் திருமிகு **வ.ராமதாஸ்,ஐ.ஏ.எஸ்.**



''தொட்டுக் காட்டாத வித்தை
சுட்டுப் போட்டாலும் வராது''

என்ற பழமொழி ஞானமார்க்கமாயினும் பாட்டு முதலான பலகலைகளாயினும் கற்றுத் தரத்தகுந்த குரு வேண்டும் என்பதை உணர்த்து கிறது. யோகக்கலை கற்போர் தகுந்த குரு மூலமாகவே குண்டலினி சக்தியை அடைகின்ற னர். ஐயப்பனை வழிபட வழிகாட்டுவோரும் குருசுவாமிகளே.

ஏகலைவன் துரோணரைக் குருவாக அவ ருடைய வடிவொன்றைச் செய்து வணங்கி வழி பாடு செய்ய வில்லாற்றலில் மிகவல்லவன் ஆனான் என்று மகாபாரதம் கூறுகிறது.

குருஉபதேசம் இல்லாமல் வழிபாடு செய் வது, அஞ்சல் கடிதத்தில் விலாசம் எழுதாமல் அஞ்சலகப் பெட்டியில் போடுவது போன்றதா கும். இவ்வுவமை டாக்டர் திருமுருக கிரு பானந்த வாரியார் கூறும் உவமையாகும். சுட்ட குடத்தில் நீர்நிற்கும். பச்சைக் குடத்தில் நிற்காது. பச்சைக் குடமாக சீடரைச் சுட்ட குடமாக்கிப் பக்குவம் செய்வார் குரு.

மூலமுதல் குரு சிவபெருமானே ஆவார். தட்சிணாமூர்த்தியாக சனகாதி முனிவர் களுக்கு உபதேசித்தார்.

''கல்லாலின் புடையமர்ந்து நான்மறைஆ
றங்கம் முதல்கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை வெல்வாம்''

உபதேசம் பெறாதவர் வழிபாடு செய் தால் பயன் இல்லை. கிருஷ்ணபகவான் உப தேசம் இல்லாமல் சிவபெருமானை வழிபாடு செய்தார் என்றும், உபமன்யு முனிவர் கிருஷ்ணன் அர்ச்சனை செய்த பூக்களைக் கொண்டுதாம் பூசை செய்ய முனிவரிடம் விளக்கம் கேட்டபோது குரு உபதேசம் பெறாமல் கிருஷ்ணர் செய்த பூசையில் பூக்கள் நிர்மால்யம் ஆகவில்லை என்று முனிவர்விளக்க உபமன்யு முனிவரிடமே கிருஷ்ணர் உபதேசம் பெற்றுக் கொண்டார் என்றும் பாகவதம் கூறு கிறது.

சமயகுரவர்கள் நால்வருக்கும் இறை வனே குருவாக வந்து ஆட்கொண்டுள்ளார்.

அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராக இருந்த மாணிக்க வாசகர் மன்னனுக்கு குதிரை வாங்க வந்தபோது திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் குருவாகக் காத்திருந்து சிவபெருமான் மாணிக்கவாசகரை ஆட்கொண் டார். திருவிடைமருதூரில் திருவடி தீட்சை தந்தார்.

''அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமை''

திருவாசகம்.

திருஞான சம்பந்தருக்கு சிவஞானம் கலந்த பாலைக் கொடுத்து ஞானம் வழங்கி னார்.

சூலை நோய் கொடுத்து திருநாவுக்கரசரை ஆட்கொண்ட இறைவர் திருநல்லூரில் அவ ருக்குத் திருவடி தீட்சை கொடுத்தார்.

''நனந்தலைய திருவடிஎன் தலைமேல்
வைத்தார்
நல்லூர்எம் பெருமானார் நல்ல வாறே''

சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட இறை வர் சித்தவடம் என்னும் மடத்தில் தங்கிய போது முதிய அந்தணர் வடிவம் கொண்டு வந்த இறைவர், சுந்தரர் தலையின் மேலே தம் திருவடியை இருமுறை வைத்து ஞானம் வழங்கி னார்.

**ஞான விளக்கு குரு :**

குரு-மனஇருளைப் போக்கும் ஞானவிளக்கு
போன்றவர்
ஒரு காட்சியைக் காணக் கண்கள் மட்டும்
போதாது
வெளிச்சம் தரும் விளக்கோ, கதிரவனோ
வேண்டும்
அந்த விளக்காக ஒளிகூட்டுபவரே குரு.

ஐம்புலன்களாகிய வேடுவர்களிடம் அகப்பட்டுத் தடுமாறுகிறது உயிர். அவ்வுயிர்க்கு நேர்ந்த துன்பத்தைத் தம் உபதேசத்தால் துடைத்து, உயிர் இறைவனை அடையும் வண்ணம் பரிபக்குவம் செய்பவர் குருநாதர்.

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை
வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த
விட்டு
அந்நியம் இன்மையில் அரன்கழல் செலுமே''
—சிவஞான போதம்.

குரு பக்குவப்பட்டவர்களுக்கே உபதேசிப்பார்:

குரு மணிவாசகர் போன்ற பக்குவப்பட்ட சீடர்களை வலிய ஆட்கொள்ள தாமே எழுந்தருள வருவார்.

தன்னை நாடிவரும் சீடனுக்கு அதற்கான தகுதி உண்டா என்பதையும் குரு சோதித்துப் பார்ப்பது உண்டு.

ஒரு பழத்தைத் தன் சீடனிடம் கொடுத்து ''யாரும் இல்லாத இடத்தில் இதை உண்டு வா. உனக்கு ஞானோபதேசம் செய்கிறேன்'' என்றார் குரு. பழத்தைப் பெற்றுக் கொண்ட சீடன் சற்று நேரத்தில் திரும்ப வந்து பழத்தை குருநாதரிடமே கொடுத்து ''யாரும் இல்லாத இடம் என்பதாக ஒரு இடம் இல்லை. இறைவன் எங்கும் இருக்கிறான்'' என்று கூறக் கேட்டு குரு சீடனின் பரிபக்குவம் அறிந்து உபதேசித்தார் என்பது ஒரு வரலாறு.

குருவின் பணி:

''முத்திநெறி அறியாத
மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப்
பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச்
சிவமாக்கி எமைஆண்ட
அத்தன்''

என மாணிக்கவாசகர் சிவபெருமானைப் போற்றுவது குருநாதருக்கும் ஏற்புடைத்தாகும்.

ஐம்புலன் ஆசையில் அகப்பட்டுத் தடுமாறி மீண்டும் மீண்டும் பிறவிகளுக்கே ஆளாகி துடிக்கிறது உயிர். புல்லாகி, பூடாகி, புழுவாய் மரமாகி, பலமிருகங்களாகப் பிறந்து பறவையாகப் பாம்பாகப் பிறந்து, பிறகு மனிதராய், பேயாய்க் கணங்களாய், அசுரராய், முனிவராய், தேவராய் இவ்வாறு எத்தனை எத்தனையோ பிறவிகள்!

''எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்
எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று
வீடுற்றேன்''

என்பது திருவாசகம்.

இறைவனுடைய திருவடிகளைத் தாமும்கண்டு தம் அடியாரும் காணக் காட்டுவதே சிறந்த குருநாதரின் அருட்பணியாகும்.

அருளாளர்களைத் தேடிச் சென்று குருவாகக் கொள்ள வேண்டும்:

குரு மொழியைத் தெய்வ வாக்காகக் கொண்டு அவர் தீயில் குதிக்கச்சொன்னாலும் ஏன் எதற்கென்று கேட்காமல் குதிப்பதே சிறந்த சீடரின் கடமையாம்.

மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், அருணகிரிநாதர் போன்ற அருளாளர்களைத் தேடி வந்து ஆட்கொண்டார் இறைவர். நம் போன்ற மாணிடர்கள் அவ்வளவு புண்ணியம் செய்யாதவர்களாய் இருப்பதால் நம் போன்றோர் அருளாளர்களைத் தேடிச்சென்று தீட்சை பெறவேண்டும்.

நமக்குப் பன்னிரு திருமுறைகள், நாலாயிரத் திவ்விய பிரபந்தம், திருவருட்பா முதலான எத்தனையோ அருள் நூல்கள்கிடைத்துள்ளன. அவற்றிலுள்ள அருள் மொழிகளையும் கூட நாம் குருமொழியாகக் கொண்டு பயன் அடையலாம்.

இராமலிங்க சுவாமிகள் கூறுகிறார், ''மாணிக்க வாசக! நின் வாசகத்தில் ஒரு மொழியே என்னையும், இறைவனையும் ஒன்று படுத்துகின்ற பெருமை உடையது. ஆதலால் எனக்கு வேறு குருமொழி வேண்டுவதில்லை'' என்கிறார் இராமலிங்க சுவாமிகள். ஆகவே அருளாளர்கள் அருளிய அரிய கருத்துகள் கூட நமக்கு குருவாக வழிகாட்டும்.

பட்டினத்தடிகளின் ஒரே ஒரு உபதேசம் எவ்வளவு உயர்வானதாக இருக்கிறது.

''ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு
உயர்செல்வமெலாம்
அன்றென்றிரு பசித்தோர் முகம்பார்
நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே
நமக்கிட்டபடி
என்றென்றிரு மனமே உனக்குபதேசம் இதே''

இந்த உபதேசம் எவ்வளவு அரிய கருத்துகளை உள்ளடக்கி இருக்கிறது. பட்டினத்தாரின் உபதேசம் பெற்று பத்திரகிரியார் துறவியானார். ஆனால் பத்திரகிரியாருக்கு முதலில் முத்தி கிடைக்கிறது. யார் யாருக்கு எது எது எப்போது கொடுக்க வேண்டுமோ அப்போது கொடுக்கிறான் இறைவன். நாம் நடுநீங்காத சிந்தையோடு இருக்கும்போது, நம் சிந்தையில் நீங்காது இருந்து இறைவனும் ஆட்கொள்கிறான்.

''நடுநீங்காமலே நமக்கு இட்டபடி
என்றென்றிரு
மனமே உனக்குபதேசம் இதே''!

என்ற பட்டினத்தார் உபதேசம் நாம் நெஞ்சில் இருத்திக் கொண்டுவிட்டால் பிறகு போட்டியேது பூசலேது!

# திருமந்திரச் செம்பொருள்



டி. வி. வெங்கட்டராமன் ஐ. ஏ. எஸ்.

ஒரு பெரியவர் சிறந்த சிவபக்தர் என்று ஊர் பொதுமக்களால் போற்றப்பட்டார். தினந்தோறும் காலையிலும் மாலையிலும் அவர் ஊரில் இருந்த சிவன் கோவிலுக்குச் சென்று சிவலிங்கத்தின் எதிரே நின்றுகொண்டு இறைவனைப் போற்றிப் பாடுவார், கண்ணீர் சொரிவார். தியானத்தில் நிற்பார், பல மணிநேரம் மெய் மறந்து இருப்பார். ''இறைவா! என்னை ஏன் இந்த பூமியில் விட்டு வைத்திருக்கின்றாய்? என்னை உடனே அழைத்துக் கொண்டு போ. உனது திருவடியைச் சேர நான் காத்துக் கொண்டிருக்கின்றேன். என்னை சோதிக்காதே!'' என்றெல்லாம் தனக்குத்தானே பேசிக் கொள்வார். ஒரு நாள் அந்தக் கோவில் அர்ச்சகர் அந்த சிவபக்தருடைய உண்மை அன்பினைச் சோதிக்க விரும்பினார். சிவலிங்கத்தின் பின்னால் ஒளிந்துகொண்டார். வழக்கம்போல சிவபக்தர் கோவிலுக்குள் வந்து இறைவனை துதித்துப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார். ''அப்பனே! என்னை எப்பொழுது உனது திருவடிகளில் இணைத்துக் கொள்ளப் போகிறாய்?'' என்று கேட்டார். ''பக்தா, உன்னுடைய அன்பை மெச்சினோம். உன்னை அழைத்துக் கொண்டு போகத் தயாராக இருக்கின்றோம். எமது தூதன் இன்னும் சில நிமிடங்களில் உன்னை வந்து அடைவான். நீ அவனுடன் புறப்பட்டு வந்து விடுவாயாக.'' என்று ஒரு குரல் சிவலிங்கத்தின் பின்புறமிருந்து எழுந்தது. நமது பக்தரைப் பார்க்க வேண்டுமே! அவர் உடல் நடுங்கிற்று. அவரது உள்ளத்தை பெருத்த அச்சம் பற்றுக் கொண்டது. தவித்தார் அந்த சிவபக்தர். ஓடி ஒளிந்து கொள்ள இடம் தேடினார். ''இறைவா! இன்னும் சிறிது காலமாவது விட்டு வையப்பா!'' என்று வேண்டத் தொடங்கினார். வெறும் அர்ச்சகருடைய குரல் அவருடைய மனநிலையையே மாற்றிவிட்டது. அவர் உருவத்தில்தான் சிவபக்தர். உள்ளத்தில் அல்ல. உள்ளம் உலகத்தில் ஊன்றி நின்றது. உலகப்பற்று இருக்கும்வரை இறப்பைப் பற்றிய அச்சம் தொடரும். இது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. ஆயினும் நாம் பற்று அற்றவர்கள் போல் நடிக்கின்றோம். இந்தப் பொய்யுலகில் வாழ்க்கை என்னும் மேடையில் சதா நடந்து கொண்டிருக்கும் நாடகத்தில் இறைவனுடைய அடியார்கள்போல நடிப்பது மிகவும் வெறுக்கத்தக்கது. தானே இதைச் செய்து வருவதாக தன்னையே நொந்துகொள்கின்றார் மாணிக்கவாசகப்பெருமான்.

''நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து, நான் நடுவே வீடு அகத்தே புகுந்திடுவான், மிகப்பெரிதும் விரைகின்றேன்'';

(திருச்சதகம் - அறிவுறுத்தல்).

அச்சம் பல வகை. சிலர் விலங்குகளைக் கண்டு பயப்படுகின்றார்கள். வேறு சிலர் மனிதர்களைக் கண்டு பயப்படுகிறார்கள். மற்றும் சிலர் தங்களைப் பற்றியே பயந்து கொள்கின்றார்கள். தங்களுக்கு, உடலுக்கு, பதவி, பட்டம், அந்தஸ்து போன்றவற்றிற்கு முடிவு வந்துவிடுமே என்கிற பயம் அரித்துத் தின்கிறது. எதையெடுத்தாலும் பயந்து, ஒவ்வொரு விநாடியும் சாகும் மனிதர்களையும் நாம் பார்க்கின்றோம். உயிர் போனால் எல்லாம் போய்விடும்.

''குடமுடைந்தால் அவை ஓடு என்று வைப்பர்;
உடல் உடைந்தால் இறைப்போதும் வையாரே!''

என்பார் திருமூலர். எனவே, இறப்பைப் பற்றிய பெரும் அச்சம் மனிதனை சதா வாட்டுகிறது.

நமது வாழ்க்கை, உடல், உடலைச் சார்ந்த கருவிகள், உட்கருவிகள் போன்றவற்றை மையமாக வைத்து இயங்கி வருகின்றது. நமது உடலைப் பற்றிய சிந்தனைகளே நமது மனதை நிரப்பி நமது எண்ணங்களையும் கருத்துக்களையும் பொறிகள் வழியே கொண்டு செல்கின்றன. நாம் பெறும் அறிவும் அனுபவமும் இவற்றின் அடிப்படையிலேயே அமைகின்றன. பொறிகளுக்கும் புலன்களுக்கும் அப்பாலுள்ளவை நமக்குத்தெரிவதில்லை. மனிதர்கள், தேவர்கள், வானவர்கள் எல்லோருமே இந்தக் குறைபாட்டிற்கு ஆளானவர்கள். மரணமற்ற வாழ்வு வாழ வேண்டுமென்று தேவர்கள் விரும்பினார்கள். ஆனால், அவர்கள் முன் தோன்றியது அமிர்தமல்ல, ஆலகால விஷம். தேவர்கள் பயந்து மூலைக்கொருவராக ஓடினார்கள். இறைவன் அந்த விஷத்தை கண்டத்தில் அடக்கி அவர்களுடைய பயத்தைப் போக்கினான். உடல் இன்பமே பெரிதென்று நினைத்து ஆசைகளை வளர்த்ததனால் வந்த விளைவு இது.

கிழக்கே எழுந்த சூரியன் மேற்கே மறைகின்றது. கன்று சில மாதங்களில் பெரிதாகி, எருதாகி, மூத்து பின்னர் விழக்கண்டும் நாம் நமது உண்மை நிலையை அறிந்து கொள்வதில்லை. நம்முடைய தாய் தந்தையரை இயற்கையாகவே வயோதிகத்தில் இழக்கின்றோம். சிறிது காலம் மிக்க வருந்துவோம். பின்னர் அந்த நினைவுகள் போய் நாம் மீண்டும் வாழ்க்கைச் சூழலில் புகும் நாளை எதிர்பார்த்து நிற்கின்றோம். பிறருக்கு எது வந்தாலும் அது நம்மை பாதிப்பதில்லை. ஆனால், நமக்கு மிகச் சிறிய துன்பம் வந்தாலும் நமது கண்களுக்கு அது ஒரு பெரிய மலை போல் தென்படுகின்றது. அதே நேரத்தில் உடலின் அடிப்படையில் எத்தனை இன்பங்கள் பெற்றாலும் அவை நமக்கு போதவில்லை. ஆசைத் தீயை மேலும் மேலும் வளர்த்து வருகின்றோம். செல்வத்தை நாடி வாழ்க்கையை மையமாக வைத்து நாம் பெற்ற ஆற்றல் அனைத்தையும் இம்மைச் சுகங்களுக்கே செலவழித்து வருகின்றோம். ஆகவே, நாம் இறக்க விரும்



பயில்லை. இறக்க அச்சப்படுகின்றோம். ஆனால், கூற்றுவனார் தமது பணியைச் செய்யத்தான் போகின்றார். சூலத்தை கையில் வைத்துக் கொண்டு காலத்தை எதிர் பார்த்து நிற்கின்றார். ஞானசம்பந்தப்பெருமான் மனதைப் பார்த்துக் கேட்கின்றார் ''ஏழை நெஞ்சே, எந்த நாளில் வாழ்வதற்காக இவ்வாறு மனதை வைத்துக்கொண்டிருக்கின்றாய்''.

நமக்கு வாழ்நாள் போவதும் தெரிவதில்லை. சாகும் நாள் வருவதும் தெரிவதில்லை. நாம் செய்யும் வினைகள், அவற்றால் வரக்கூடிய விளைவுகள் தொடர்ந்து வரும் பாசங்கள், நம்மை பிடித்து ஆட்டும் பந்தங்கள் இவற்றைப் பற்றியும நினைப்பதில்லை.;

''நீ நாளும் நன்னெஞ்சே,

நினைகண்டாய்; யார் அறிவார்

சாநாளும் வாழ்நாளும்?''

ஆனால், மரணம் வருவது உறுதி. ஒரு நாள் புலன் ஐந்தும் கலங்குகின்றன. பொறிகள் நிலை கெட்டு விடுகின்றன. அறிவு அழிகின்றது. நெறி மயங்குகின்றது. கபம் தொண்டையை அடைக்கின்றது. நமது மனம் நம் வசமின்றி சுழலுகின்றது. உயிர் போகும் நேரம் நெருங்கி வருகிறது. அப்போதும் நம்முடைய மனதிலே இருக்கும் எண்ணமெல்லாம் நம்மைப் பற்றியே. அஞ்சாதே என்று அருள் செய்யும் இறைவனைப் பற்றியா நாம் நினைக்கப் போகின்றோம்?

''புலன் ஐந்தும் பொறி கலங்கி நெறிமயங்கி

அறிவு அழிந்திட்டு ஐம்மேல் உந்தி

அலமந்த போதாக, அஞ்சேல் என்று

அருள் செய்வான் அமரும் கோயில்''

தன்னிலைக் கெட்டு, கதிகலங்கி மயங்கி கிடக்கும்பொழுது நம்மை பாதுகாப்பு செய்யும் அரண் ஒன்றேதான். அது இறைவனைப் பற்றிய நினைவாகும். அவனுடைய அருளாலேயே இறைவனை நினைக்கவேண்டும் என்கின்ற எண்ணம் மனதிலே உதிக்கின்றது. அது ஒரு நீண்டகாலப் பயிற்சி. மரணம் நெருங்கும்போது மட்டும் இறைவனை நினைக்க வேண்டும் என்று ஓர் ஆவல் எழுந்தாலும் அது நிலைக்காது. ஆயிரத்தில் ஒருவர் இறைவனை நினைத்துக்கொண்டே உடலைவிட்டு நீங்குவார். அவர் அருள் பெற்றவர். இறைவனுடைய அருள் அவருக்கு முழுமையாக இருப்பதால் அவர் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. தனது மனதைப் பக்குவப்படுத்தி மரணம் வரும் காலத்தை எதிர் நோக்கி, தனது பந்த பாசங்களையெல்லாம் களைந்து, இறைவன் நடமாடும் திருவீதியில் அவர்களும் நடக்கத் தொடங்கிய பிறகு அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை. இது ஞானசம்பந்தப் பெருமானுடைய திருவாக்காகும்.

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் உயிருக்கு வினைக்கடலைச் சேர்க்கின்றன. இறப்புக்கும் பிறப்புக்கும் வித்திடுகின்றன. எல்லாவித செல்வங்களையும் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் தலைப்பட்டு நிற்கின்றது. ஆனால், செல்வம் நிலையற்றது. செல்வத்தை நீக்கி இல்லத்தை அடைய வேண்டும் என்கிற

உணர்வு இறைவன் அருளால் உள்ளத்திலே எழத் தொடங்கிய போது செல்வத்தின் மீது உள்ள பற்றினால் நமது மனதிலே எழும்பும் பய உணர்வும் நீங்குகின்றது. நமது நோக்கத்தைப் பற்றி நம்முள் தெளிவு ஏற்படும்பொழுது புலன்களில் தன்மை மாறுகிறது. புறப்பொருள்களின் ஆதிக்கம் குறைகின்றது. அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை. எமன் வந்தாலும் புறப்படத் தயாராக இருக்கின்றோம். திருமந்திரத்தின் தெளிவு மனதில் அமைதியை தோற்றுவிக்கிறது.

''தேற்றித் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே''

(திருமந்திரம்....172)

இறவாத இன்ப அன்பினால் இந்த அமைதியைப் பெற்றவர் காரைக்கால் அம்மையார். இறைவனிடம் பிறவாமை வேண்டுகின்றார். அதே நேரத்தில் இறப்பும் பிறப்பும் தான் செய்த வினைப்பயனையொட்டி உள்ளது என்பதை அறிந்துகொண்டவர். இறைவனிடமிருந்து எத்தகைய வரம் பெறவேண்டும் என்று நன்கு உணர்ந்துகொண்டவர். ஆகவே, ஒருவேளை மீண்டும் பிறக்க வேண்டியிருந்தால் ''இறைவா, உன்னை நான் என்றும் மறக்காமல் இருக்க வேண்டும்'' என்று யாசிக்கிறார். ஒரு அடி மேல் செல்கின்றார். ''இறைவா! நீ ஆடும்பொழுதெல்லாம் நான் உன் திருவடிக்கீழ் மகிழ்ந்து பாடி இருக்க வேண்டும்'' என்று வேண்டுகின்றார். ஆதியும் அந்தமும் இல்லாத இறைவன் உயிர்கள் உய்வடைவதற்காக ஆதியும் அந்தமும் இல்லாமல் திருநடனம் புரிகின்றான். அம்மையாரும் ஆதியும் அந்தமும் இல்லாமல் அவன் திருவடிகளின்கீழ் அமர்ந்து அந்த இன்பத்தைப் பருகிக் கொண்டிருக்கின்றார். யாருக்காக அவர் அச்சப்பட வேண்டும்?

அடியார்களுடைய இயல்பு இதுவே. இறைவனுடைய ஆணைவழியே இயங்கிவரும் ஐம்பெரும் பூதங்களும் ஒருவேளை தன் நிலையில் கலங்கினாலும் சிவபெருமானுடைய மலர்த் தாளினை தம் மனத்திலிருந்து ஒரு போதும் மறத்தல் இல்லாதவர்கள். இறைவன் மீது உள்ள ஒப்பற்ற காதலால் அந்த நிலையை அவர்கள் அடைந்தவர்கள். குற்றமற்ற குணமலை போன்றவர்கள். சேக்கிழார் பெருமான் திருக்கூட்டத்தினரின் சிறப்பை எடுத்துரைக்கும் சொற்கள் அச்சமின்மைக்கு ஒரு விளக்கமாகும்.

''பூத மைந்து நிலையிற் கலங்கினும்
மாதோர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காத லுறைப்பி னெறிநின்றார்
கோதிலாத குணப்பெருங் குன்றனார்''

(திருத்தொண்டர்புராணம் 14)

## பக்தி என்பது என்ன?

பகவானுக்கு சேவை செய்வதே பக்தியெனப்படும். இறைவனைப் பற்றிய எண்ணங்களே எப்போதும் மனத்தில் நிறைந்திருந்தால் தான் பக்தி உணர்வு ஏற்படும். 'பக்தி'யுடனிப்பவருக்கு மனதில் வேதாந்த இச்சைக்கும் இடமிருக்காது. லாபமோ, நஷ்டமோ, சுகமோ, துக்கமோ, போற்றுதலோ, தூற்றுதலோ எது வந்தாலும் நிலையான கலங்காத மனத்துடன் இருப்பவரே பக்தர்.

—ஸ்ரீ சத்திய சாயி பாபா

இறைவனுடைய பேரருள் வெள்ளத்தில் ஊறித் திளைத்தார் திருநாவுக்கரசர். இறைவன் அவருக்கு சூலை நோயைக் கொடுத்து ஆட்கொண்டான். நாவுக்கரசரும் இறைவனது பெரும் கருணைக்கடலுள் மூழ்கித் திளைத்தார். ஆனாலும், அரசனுடைய உதவியுடன் வஞ்சகர் நாவுக்கரசரை வருத்த வேண்டி அவர்மீது பல கொடிய செயல்களைப் புரிந்தனர். அவரைப் பல்வேறு சோதனைகளுக்கு ஆளாக்கினர். நாவுக்கரசர் தளர்ந்தாரில்லை. சிவபிரானுக்கு ஆளானவர் வேறொருவருக்கும் ஆளாகமாட்டார். இன்பத்திற்கும் துன்பத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு அரும்பொருளை உடலிடம் கொண்டபின் வேறொருவருக்கும் பணி செய்து கிடக்க வேண்டியதில்லை. அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை. நமனைக் காலால் உதைத்த இறைவனை அடைந்தபின்னர் நமனை அஞ்சுவதில்லை, ஒருவருக்கும் பணிவதில்லை. நாவுக்கரசரின் திருத்தாண்டகத்தை படித்தாலே யமபயம் பறந்தோடிவிடும்.

''நாமார்க்குங் குடியல்லோம்; நமனை யஞ்சோம்;
நரகத்தி லிடர்ப்படோம்; நடலை யில்லோம்;
ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோமல்லோம்
இன்பமே; யெந்நாளுந் துன்ப மில்லை;

(இதன் தொடர்ச்சி 28-ம் பக்கம் காண்க)



# விண்முட்ட எழுந்த தென்காசி கோபுரம்

**"இராணி" வார இதழிலிருந்து இக்கட்டுரை நன்றியுடன் எடுத்து வெளியிடப்படுகிறது.**

இருநூறு ஆண்டுக் காலமாக மொட்டைக் கோபுரமாக விளங்கிய தென்காசி இராசகோபுரம், இன்று 178 அடி உயரத்துடன், ஒன்பது நிலைகளுடன் விண்முட்டும் அளவில் ஓங்கி உயர்ந்துகம்பீரமாகக் காட்சி தருகிறது.

''தினந்தந்தி'' அதிபர் திரு பா.சிவந்தி ஆதித்தன் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட திருப்பணிக் குழு, ரூ.1 கோடி செலவில் இந்தப் புதிய இராச கோபுரத்தைக் கட்டி முடித்திருக்கிறது.

இராசகோபுர திருப்பணி நிறைவு விழாவும், குடமுழுக்குப் பெருவிழாவும் ஜூன் மாதம் 25ந் தேதி திங்கட்கிழமை காலை 9.30 மணி அளவில் சிறப்புற நிறைவேறின.



தீக்கோளால் பாதிக்கப்பட்ட நிலையில் இருந்த இராஜகோபுரம்

வரலாற்றுச் சிறப்புமிக்க இந்தத் திருக்குட நீராட்டு விழாவில் தமிழ்நாடு முழுவதும் இருந்து 5 லட்சம் பக்தர்கள் கலந்து கொண்டார்கள்.

**இராசகோபுர வரலாறு:**

நெல்லை மாவட்டம் தென்காசியில் உள்ள உலகம்மை-காசிவிசுவநாதர் கோவில் 500 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது.

தென்காசியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி நடத்தி வந்த பராக்கிரம பாண்டியன் என்ற மன்னன் இந்தக் கோவிலைக் கட்டினான். மதுரையை இழந்த பாண்டியர்கள், தெற்கே சென்று நெல்லை மாவட்டத்தில் தங்கள் ஆட்சியை அமைத்துக் கொண்டார்கள். இவர்களிலும் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிச் செய்தவர்கள், ''தென்காசிப் பாண்டியர்'' என்று சொல்லப் பட்டார்கள்.

இந்தத் தென்காசிப் பாண்டியர்களில் மிகவும் புகழ் பெற்றவன் பராக்கிரம பாண்டியன், வீரமும் வெற்றியும் ஒருங்கே நிரம்பப் பெற்றவன் இவன். இவன் மதுரையை மீட்டான் என்றும், இலங்கை மீது படையெடுத்துச் சென்று சிங்கை அனுராதபுரம் ஆகியநகரங்களைக்கைப்பற்றினான் என்றும் வரலாறுகள் தெரிவிக்கின்றன. பராக்கிரம பாண்டியன் தமிழிலும் புலமைபெற்று விளங்கினான்.

**மன்னன் கண்ட கனவு:**

தென்காசியில் சிற்றாறு என்று சொல்லப்படும் ஆற்றங்கரையில் காசுசிவிசுவநாதர் கோவிலைப் பராக்கிரம பாண்டியன் கட்டினான். கோவிலைக் கட்டி முடிக்க 17 ஆண்டுகள் ஆயிற்று. 1429ம் ஆண்டு கட்டிடவேலை தொடங்கி 1446ல் முடிந்தது.

இக்கோவிலை மன்னன் கட்டியதற்கு ஒரு வரலாறு இருக்கிறது. சிறந்த சிவ பக்தனான மன்னனின் கனவில் ஒருநாள காசிவிசுவநாதர் தோன்றி ''காசியில் என் கோவில் சிதைந்து கிடக்கிறது. எனவே, தெனகாசியில் எனக்குப் புதிய கோவில் ஒன்று கட்டுவாயாக'' என்று கூற அதன்படி இக்கோவிலைப் பராக்கிரம பாண்டியன் கட்டினான் என்பது ஒரு வரலாறு. வடக்கேயுள்ள காசிக்குப் போய் வந்தபின்பு இந்தத் தென்காசி நகரையும், காசிவிசுவநாதர் கோவிலையும் பராக்கிரம பாண்டியன் கட்டினான் என்பது ஒரு வரலாறு..

இதன் காரணமாக இம்மன்னன் ''காசிகண்ட பாண்டியன் ' என்று அழைக்கப்பட்டான்.



**1963க்குப் பின் காட்சியளித்த மொட்டை கோபுரம்**



**ஒன்பது நிலைகளுடன் புதிதாகக் கட்டப்பட்டுள்ள 178 அடி உயர இராச கோபுரம்**

இக்கோவிலை ஒரு கலைச் செல்வம் என்றே சொல்ல வேண்டும். காண்போரின் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் நுண்ணிய கலைத் திறன் வாய்ந்த பேரெழில் மிக்க சிற்பங்களை இக் கோயிலில் மன்னன் வடித்து வைத்துள்ளான். நடராசர், காளிதேவி, ஊர்த்துவ தாண்டவர், ரதி, மன்மதன், தமிழணங்கு முதலிய கலையழகில் சிறந்த சிலைகளை இன்றும் இக்கோவிலில் காணலாம். பராக்கிரம பாண்டியன் சிலை ஒன்றும் இருக்கிறது.

பிற்காலப் பாண்டியர்கள் இக்கோவிலில் முடி சூட்டிக் கொண்டார்கள். எனவே, இக்கோவில் பாண்டியர் வரலாற்றில் முக்கிய இடம் பெற்றது.

இக்கோவிலைக் கட்டிய பராக்கிரம பாண்டியனே, நான்கு பாடல்களைப் பாடி, கல்வெட்டாக் கிப் பொறித்து வைத்துள்ளான். இன்னும் இக்கல் வெட்டுப் பாடல்கள் கோயிலில் உள்ளன. பராக் கிரம பாண்டியன் பக்தியும் இக்கோயில் மீது அவன் கொண்ட அளவற்ற அக்கறையும், அவன் தமிழ்ப் புலமையும் இப்பாடல்களில் வெளிப்படுகின்றன.

முதல் பாடலில், இக்கோவிலுக்குக் காவலாக இருப்பார் பாதங்களை என் தலைமேல் கொள் வேன் என்று பராக்கிரம பாண்டியன் கூறுகிறான்.

2-வது பாடல்-

"ஆராயினும் இந்தத் தென்காசி
மேவும் பொன்னாலயத்து

வாராததோர் குற்றம் வந்தால்
அப்போது இங்கு வந்து அதனை

நேராகவே ஒழித்துப் புரப்பார்களை
நீதியுடன்

பாரோர் அறியப் பணிந்தேன்
பராக்கிரம பாண்டியனே"

இக்கோவிலை விரிவுபடுத்துவோருக்கு நான் ஏவல் செய்வேன் என்று பராக் கிரம பாண்டியன் கூறுவது 3 வது பாடல்.

இக்கோவிலில் தவறாது பூஜைகள் நடக்க ஏற்பாடு செய்கிறவர் பராக் கிரம பாண்டியனுக்கு அடைக்கலம் அளித்தவர் ஆவார் என்பது 4-வது பாடலின் கருத்து.

தமிழ்நாட்டில் எத்தனையோ மன்னர்கள் கோவில்கள் கட்டியிருக் கிறார்கள். ஆனால், தானே பாடல் பாடி, அதனைக் கோவிலிலேயே கல் வெட்டாகப் பொறித்து வைத்துள்ள ஒரே மன்னன், பராக்கிரம பாண்டியன்.

**இராச கோபுரம்:**

இக்கோவிலுக்கு பராக்கிரம பாண்டியனே இராசகோபுரம் ஒன்று கட்டத் தொடங்கினான். ஓங்கு புகழ் ஒன்பது நிலைக் கோபுரமாக அதை அமைக்க அரசன் விரும்பினான். ஆனால், அவனது காலத்தில் கோபுர வேலை முடியவில்லை. அவனது தம்பி குலசேகர பாண்டியன் நிறைவு செய்தான்.

1456ம் ஆண்டு இராசகோபுரம் வேலை தொடங்கப்பட்டது. 1505-ம் ஆண்டு முடிந்தது. அதாவது, ஒன்பது நிலை கொண்ட இராசகோபு ரத்தைக் கட்ட சரியாக ஐம்பது ஆண்டுக் காலம் ஆயிற்று.

சுமார் 200 ஆண்டுக்கு முன் ஏற்பட்ட ஒரு தீக்கோளில் இந்த ராசகோபுரம் சேதம் அடைந்து கலசம்-சிகரம் இல்லாமல் மொட்டைக் கோபுர மாக ஆகிவிட்டது. அந்த மொட்டைக் கோபுரமும் இரண்டாக வெடித்து, நடுவில் பெரிய பிளவு ஏற் பட்டு ஒட்டைக் கோபுரமாகவும் விளங்கியது.

மின்னல் தாக்கி, கோபுரத்தில் தீப்பிடித்தது என்று சொல்லுகிறார்கள். அந்நாளைய அரசாங்க ஆவணங்கள் கோபுரத்தில் சேமித்து வைக்கப்பட்டு இருந்தன. அவை தீப்பிடித்துக் கொண்டன என்று கூறுவார்கள். அந்நாளில் கோபுரத்தின் நிலைகள், உத்தரங்கள் மரத்தில் அமைக்கப்பட்டு இருந்தன.

இராசகோபுரத்தைப் புதுப்பித்துக் கட்ட யாரும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. இராச கோபுரம் கட்ட அரசனுக்கே 50 ஆண்டுக் காலம் ஆயிற்று என்றால், சாதாரண மக்கள் எப்படி முன் வருவார்கள்? இதன் காரணமாக ஒன்பது நிலை யுடன் ஓங்கு புகழுடன் விளங்கிய கோபுரத்தை கடந்த இருநூறு ஆண்டுக்காலமாக "மொட்டைக் கோபுரம்" என்றே மக்கள் சொன்னார்கள்.



இராஜகோபுரம் கட்டிய திரு முத்தையா தபதியை மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு கே.பி. கந்தசாமி, எம்.ஏ., அவர்கள் பாராட்டிப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.

தமிழ்நாடு அரசு 1963ம் ஆண்டு 'தமிழவேள்' பி.டி இராசன் தலைமையில் ஒரு திருப்பணிக் குழுவை அமைத்தது. அக்குழு கல்காரத்துக்கு (அடித் தளத்துக்கு) மேல் இருந்த சிதைந்த கோபுரத்தை அகற்றியது. அதற்குமேல் அதன்பணி தொடர முடியாமல் போயிற்று.

**திருப்பணிக் குழு:**

1981ல் இராசகோபுரத்தைக் கட்ட மீண்டும் தமிழ்நாடு அரசு முயற்சி எடுத்துக்கொண்டது. 9.11.1981 அன்று புதிய திருப்பணிக்குழு ஒன்றை அரசு அமைத்தது. எடுத்த காரியத்தை இடைவிடாது செய்து முடிக்கும் வல்லமை படைத்த திரு பா.சிவந்தி ஆதித்தனை இத்திருப்பணிக் குழுவின் தலைவராக அரசு நியமித்தது.

முதலில், சிறந்த தபதியை திருப்பணிக்குழு தேர்ந்து எடுத்தது. இந்தியாவில் 25 கோபுரங்களை அமைத்தவரும், அமெரிக்காவில் மீனாட்சி கோவில், லட்சுமி கோவில், வெங்கடேசுவரர் கோவில், கணேசர் கோவில்களைக் கட்டியவரும், தமிழ்நாட்டில் சமீபத்தில் மிகப்பெரிய (47 அடி) உயரமுள்ள கிருஷ்ணன் சிலையை வடித்தவருமான ''சில்ப கலாமணி'' எம்.முத்தையா தபதி இப்பணிக்காக அமர்த்தப்பட்டார். வரைபடங்கள் வரைதல், பொறியாளர் ஆய்வுகள், நிதி திரட்டுதல் போன்ற முன்னேற்பாடுகளும் நடந்தன.

28.11.1984 அன்று இராசகோபுரத் திருப்பணி தொடங்கியது. ஆறு ஆண்டுகளில் வேலைகள் முடிந்து, திருப்பணி நிறைவுற்றது. 25.6.1990 திங்கட்கிழமை காலை 9.30 மணிக்குக் குடமுழுக்குப் பெருவிழாவும் மிக விமரிசையாக நடந்து இருக்கிறது.

கோபுரம் குடமுழுக்கு விழாவையொட்டி கோவிலில் உள்ள மற்ற விமானங்கள், நடைபாதைகள், சந்நிதிகள் அனைத்துமே புதுப்பிக்கப்பட்டு, கோவில் புதிய பொலிவுடன் விளங்குகிறது.

ஒன்பது நிலை கொண்ட இந்த கோபுரத்தின் உச்சிக்குச் செல்லப்படிகள் அமைக்கப்பட்டுள்ளன. உச்சியில் நின்று, தென்காசி நகரையும், குற்றாலம் அருவியையும், சுற்றுப்புற அழகையும் கண்டுகளிக்க 9 வது நிலையில் வசதி செய்யப்பட்டுள்ளது.

ரூ.1 கோடி செலவில் திருப்பணி நடந்துள்ளது. பொது மக்கள் வழங்கிய நன்கொடை, திருப்பணி உண்டியல் வருமானம், தன் நபர்களின் உபயம், திருச்செந்தூர் முருகன் கோவில், பழனி முருகன் கோவில், மதுரை மீனாட்சிஅம்மன் கோவில், திருத்தணி சுப்பிரமணியசாமி கோவில், சமயபுரம் மாரியம்மன் கோவில் ஆகிய ஆலயங்கள் வழங்கிய நன்கொடைகள் வாயிலாகத் திருப்பணி இனிது நிறைவேறியது.

அந்நாளில் தமிழ்நாட்டில் எத்தனையோ கோபுரங்கள் கட்டப்பட்டன. ஆனால், இந்த நூற்றாண்டில் இரண்டே இரண்டு இராசகோபுரங்கள் தான் கட்டப்பட்டுள்ளன. ஒன்று சில ஆண்டுகளுக்குமுன் திருவரங்கத்தில் ஜீயர் சுவாமிகள் கட்டிய இராசகோபுரம். அது வைணவக் கோயில்.

மற்றொன்று சிவந்தி ஆதித்தன் தலைமையில் அமைந்துள்ள திருப்பணிக்குழு இப்பொழுது தென்காசியில் கட்டியுள்ள இராசகோபுரம். இது சைவக் கோவில்.

# ஃ பெய்யெனப் பெய்யும் மழை! ஃ



''தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழு
வாள்
பெய்யெனப் பெய்யும் மழை''

இந்த குறளுக்கு உரை எழுதிய பலரும் தவறான உரையே எழுதியிருக்கிறார்கள்.

கழனிக்கு மழை தேவை என்று உழவன் நினைத்த போது உடனே மழை பொழிந்து விட்டால்-அந்த மழை எத்தனைக் குடும்பங் களின் நல்வாழ்த்தைப் பெறுகிறது! பெய்யென பெய்யும் மழை பெறுகிற புகழ் மாலைகள் எண்ணிலடங்கா!

அதுபோன்றவளாம், கணவனையே தெய்வ மாகக் கருதும் பெண்! அந்தக் கருத்தைத்தான் வள்ளுவர் வண்ணத் தமிழிலே குழைத்துத் தருகிறார்.

—மாண்புமிகு முதல்வர்
**டாக்டர் கலைஞர் அவர்கள்**

---



**திருப்பணிக் குழுத் தலைவர் திரு பா. சிவந்தி ஆதித்தன் அவர்களை மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு கே.பி. கந்தசாமி, எம்.ஏ., அவர்கள் பாராட்டுகிறார்.**

பெருமை:

உலக வரலாற்றில் பாண்டிய மன்னர் பரம் பரைக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு.

வரலாற்றுக் காலத்துக்கு முன்பே பாண்டியர் வரலாறு தொடங்கிவிடுகிறது. 18-ம் நூற்றாண்டு வரை இரண்டாயிரம் ஆண்டுகள் - பாண்டியர் பரம்பரை தொடர்ந்து ஆட்சி செய்து வந்தது. உலக வரலாற்றில் வேறு எந்த அரச பரம்பரையும் இவ்வளவு நீடித்த காலம் ஆட்சி செய்தது இல்லை. தமிழ்நாடு முழுவதுமே அந்நியருக்கு அடிமைப்பட் டுக் கிடந்த காலத்தில் கூட தென்காசியில் பாண்டி யர் ஆட்சி நடந்து வந்தது.

இந்தத் தென்காசிப் பாண்டியர்களில் மிகச் சிறந்த மன்னன் பராக்கிரம பாண்டியன். மது ரைப் பாண்டியர் இழந்த புகழை மீட்டியவன், இந்த பராக்கிரம பாண்டியனே. இவன் எவ்வளவு செல்வாக்குடனும் செல்வத்துடனும் ஆட்சி செய் திருந்தால், இவ்வளவு பெரிய இராச கோபுரத் துடன் கூடிய கோவிலைக் கட்டியிருப்பான். இந்த இராசகோபுரம் புதுப்பிக்கப்பட்டு இருப்பது, பராக் கிரம பாண்டியனின் புகழையே புதுப்பித்தது போல ஆகும். இது ஒவ்வொரு தமிழனும் பெரு மைப்பட வேண்டிய ஒன்று அல்லவா!



# திருஞானசம்பந்தரும் குருஞானசம்பந்தரும்



டாக்டர் செல்வி சிவபார்வதி
**இணை இயக்குநர், கல்லூரிக் கல்வி இயக்கம்.**

***(திருப்பனந்தாள் காசி மடத்தில் நடைபெற்ற குருபூஜை விழாவில் படிக்கப்பெற்ற கட்டுரையாகும் இது.)***

சிவன் என்னும் நாமம் தமக்கே உரிய செம் மேனி எம்மானை முழு முதற் பொருளாகக் கொண்டு வழிபடும் சைவ மரபில், திருநெறிய தமிழ் என்று போற்றப் பெறும் பெருஞ்சிறப் புடையன திருமுறைகளாகும்.

''அருநெறிய மறை வல்ல முனியகல்
பொய்கை அலர் மேய
பெருநெறிய பிரமாபுர மேய
பெம்மான் இவன் தன்னை
ஒருநெறிய மனம் வைத்து உணர்
ஞானசம்பந்தன் உரை செய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை
தீர்தல் எளிதாமே''

எனபது திருஞானசம்பந்தர் ஞானப் பாலருந்திய வுடன் சிவஞான சம்பந்தம் பெற்று அருளிய முதல் திருமறையின் திருக்கடைக் காப்பு ஆகும்.

இதனுள் ''பெருநெறிய பிரமாபுரம்'' என்பது பெரியவனாகிய சிவ பரம் பொருள் உயிர்களை நோக்கி வந்த நெறி எனவும் அதுவே பிரமாபுரப் பெருநெறி எனவும் பொருள் படும்.

பெரியவனாகிய சிவ பரம்பொருள் ஆன்மாக் களை நோக்கி வந்த நெறியே 'குருநெறி' எனப் பெறும்.

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தமமுதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்தத
விட்டு
அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே''

என்ற சிவஞானபோதம் 8-ஆம் நூற்பாவிற் குறிப் பிடப் பெறும் நெறி குருநெறியே ஆகும்

தருமையாதீனக் குரு மரபைத் தோற்றுவித்த குருஞான சம்பந்தர் தாம் அருளிய சிவபோக சாரத்தில்

''நெருப்பென்றால் வாய்சுடுமோ,
நெய் பால் தேன் கட்டி
கருப்பென்றால் தித்தியா காண்நீ - விருப்பமுடன்
நீ பிரமம் என்றக்கால நீ பிரமம் ஆயினையோ
நீ பிரமம் சற்குருவால் நில்''

என்று கூறுவதை நோக்கினால் ஓர் உண்மை புலப் படும். எந்நிலையில் நிற்பதாக அமைந்தாலும், அந்நிலையைக் குருவால் தான் பெற முடியும் என் பதே அந்த உண்மை.

குருநெறியை முதன் முதலாக இவ்வுலகில் நிலைநிறுத்திய ஞானகுருவாக வந்தவர் திருஞான சம்பந்தரே என்று கூறுவார் வள்ளலார்.

குருநெறியே பெருநெறி எனவும் 'திருநெறி' எனவும் போற்றப் பெற்றது.

குமரகுருபரர் குருமரபை இணைத்துக் காட் டும் மரபை நாம் சிந்தித்து உணர்தல் வேண்டும்.

குமரகுருபரர் தம்முடைய ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரை அன்பு மீதூர வணங்கு கின்றார்.

திருவெண்ணீறும், அக்கமணியும், தவப்பொலி வும் அழகு முதிர்ந்து கனிந்தது போன்ற தோற்ற மும் கொண்ட ஞானாசிரியரைக் காண்கின்றார். அவருடன் தருமையாதீன முதற்குருவராகிய குருஞான சம்பந்தரையும், சீர்காழிப்பதியில் தோன்றி, ஞானப்பால் அருந்திய திருஞான சம் பந்தரையும் இணைத்துக் காண்கிறார்; உலகுக்குக் குருநெறியை அமைத்துக் காட்டுகின்றார்.

மாசிலாமணி தேசிகரிடம் குருஞானசம் பந்தரை இணைத்துப் பார்ப்பது திருமடத்து மரபு. அத்துடன் திருஞானசம்பந்தராகிய உலக குருவை இணைத்துக் காட்டுகின்ற குமர குருபரரின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து தெளிதல் வேண்டும்.

திருஞான சம்பந்தர் சீகாழிப் பதியில்தோன்றி மூன்று வயதில் ஞானப்பால் உண்டு. பதினாறு வயதிலே நல்லூர்ப் பெருமணத்தில் முத்திப் பேறு எய்தினார். அவர் மட்டும் அவ்வளவு இளம்பருவத் தில் முத்தி எய்தாமல் மிக முதிர்ந்த பருவம் வரைக்கும் வாழ்ந்திருந்தால் அவருடைய தோற் றப் பொலிவு எவ்வாறு இருந்திருக்கும்; இப்போது கண் முன்னே காணுகின்ற மாசிலாமணி ஞான சம்பந்த தேசிகர் போலத்தான் அந்தத் திருஞான சம்பந்தர் தோற்றமளித்திருப்பார் என்று குமர குருபரர் கருதுகின்றார்.

''அமண் மாசு அறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்து
உள்ளதன் படிவம் உணர்த்துவ கடுப்ப
மாநிலத்து அமர்ந்த ஞானசம்பந்தன்''
(பண்டார மும்மணிக் கோவை 2)

என்று மனமுருகிப் பாராட்டுவதன் மூலம் 'குரு நெறி' இணைத்துக் காட்டப் பெறுகின்றது.

மீண்டும், குமரகுருபரர் பண்டார மும்மணக் கோவையின் 8ஆம் திருப்பாட்டினுள்

''தருமையும் கமலையும் விரி தமிழ்க் கூடலும்
திருநகராக அரசு வீற்றிருக்கும்
மாசிலா மணித் தேசிகராய
சம்பநதப் பெயர் தரித்தமையால் எமைச்
சம்பந்தம் செயத் தகும் தகும் நினக்கே''

என்று கூறுவதானாலும் தெளிய உணரலாம்.

மேலும் குருவும் சிவ பரம்பொருளும் ஒன்றே என்பதையும், குருவுக்கும் சிவத்துக்கும் வேறுபாடு காணலாகாது என்பதையும் குருவே அனைத்தையும் எல்லையில்லாது வழங்குவர் என்பதையும் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றார்.

''ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருள் அறை திறந்த பெருவெளி மண்டபத்து
உயர் நாதாந்தத் திருமலர் அமளியில்
புளகம் மெய் போர்ப்ப மொழி தடுமாற
உள்ளொளி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவாரமுத பானமது ஆர்ந்து
கருவிகள் கழன்று பரவசம் ஆகிப
பரமானந்தப பரவையுட் படிந்து
பேரா இயற்கை பெற்று இனிது இருப்ப
ஆரா இன்பம் அளித்தருள்''

என்று குருவையே சிவம் எனக் கருதி வேண்டும் நிலையை உய்த்துணர்தல் வேண்டும்.

அடுத்து, சிவபெருமானே தம்முடைய உருவத்தை மறைத்துக் கொண்டு மானிடச் சட்டை தாங்கி ஞானாசிரியராக, அருட்குருவாக வந்து எமை ஆட்கொண்டார் என்று உருவகப்படுத்திக் காட்டும் அழகையும் கண்டு தெளிதல் வேண்டும்.

''தண்பனை உடுத்த தமிழ்ப் பெருங்கூடல்
வண்பதி புரக்கும் மாசிலாமணி
தலைப்படு கலை மதி தாங்காது ஆங்கு அத்
தலைப்படு கலைமதி தாங்கி, நிலைப்படு
மான் இடனாய வடிவு கொண்டருளாது
மானிடனாய வடிவு கொண்டருள்
எறபு அணி பூணாது என் பணி பூண்டு
பாரிடம் சூழாது பாரிடம் சூழ் தர
ஆரூர் அமர்ந்த ஞானசம்பந்த''

என்று பண்டார மும்மணிக்கோவை 14-ஆம் செய்யுளிற் கூறியுள்ளமை கண்டுணரலாம். இதே கருத்தை வலியுறுத்தும் வகையில் :

''நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ
நூன்முறை பயின்ற நுண்மைசால் அறிஞ
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்குங் காவியப் புலவ
செவிதொறும் செவிதொறும் தெள்ளமுது ஊட்டுபு
கவிஞர் வயின் நிரப்பும் கல்விப் பிரசங்க
வெள்ளிடைத் தோன்றாது உள்ளது உணர்த்தவும்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவும்
சாயா மும்மலைச் சகலரேம் உய்ய

---

## நீ விதைத்ததையே அறுவடை செய்வாய் !

ஒரு நல்ல காரியம் செய்தால் தீய பலன் கிட்டாது. ஒரு தீய செயலால் நன்மையைப் பெற முடியாது. நீ எந்த வகை செயல் செய்தாலும் அதற்கொப்பவே அதன் பலன் இருக்கும்.

—ஸ்ரீ சத்திய சாயி பாபா

---

எம் உருக் கொண்டும் எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடும் அகழ்ந்து
சிற்பரம் உணர்த்தும் சற்குரு வாய்''

இனி, குரு ஒருவரே தகுதி பாராது சத்திநிபாதம் வழங்கும் ஆற்றல் உள்ளவர் என்பதைப் புலப்படுத்தும் முறையில் குமர குருபர முனிவர் அருளும் திறம் நினைத்து மகிழ்வதற்குரியது.

''சத்திநிபாதம் நின் சந்நிதிப் பட்ட
இத்திறத்து எளிதினில் எய்தியதுஎனக்கே; அதனால்
சரியையில் தாழ்க்கலை, கிரியையில் பணிக்கலை
யோகத்து உய்க்கலை, பாகமும் நோக்கலை
நாளை, இன்று என ஒரு வேளையும் நவிற்றலை
ஈண்டு எனக்கு அருளுதி இறைவ
பூண்டு கொண்டிருப்பன் நின் பொன்னடித்
துணையே''

என்பது பண்டார மும்மணிக்கோவையின் 29-ஆம் பாட்டு.

இனி இறுதியாக ஓர் அரிய செய்தியைக் கூறி முடிக்கின்றார்.

இப்பண்டார மும்மணிக் கோவையை ஏற்றுக் கொண்டதன் காரணமாக, மாசிலாமணி தேசிகராம், அருட்குருவே, என்னைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கையும் ஒரு சேரக் கொடுத்து ஆட்கொண்டார் என்று கூறுகிறார் குமர குருபரர் முனிவர்.

விரிக்கும் சரியை இப் பாமாலை
சேர்த்தது: மெய்க்கிரியை
தரிக்கும் படிக்கு இன்று சாற்றிய
தே, மற்று என் தண் தமிழைத்
தெரிக்கின்ற போது அருள் செய்தது
வே, சிவயோகம் உண்மை
பரிக்கின்ற ஞானம், ஒன்றே மாசிலா
மணி பாலித்ததே.

என்பது பண்டார மும்மணிக்கோவையில் 34-ஆம் பாடல்.

பண்டார மும்மணிக் கோவை அருளியதே சரியையாகும். ஞானகுருவானவர் தரிக்கும்படி இதனைச் சாற்றியதே கிரியையாகும். இப் பாமாலையை அவர் ஏற்றுக் கொணடபோது திருவருள் புரிந்ததே சிவ யோகமாகும். இவற்றுன் மூலம் அவர் அடியேனுக்கு வழங்கியது சிவஞானம் ஆகும் என்றார்.

''மாசிலா மணித்
தேசிகா என
பேசுவோர்கண் முப்
பாசம் ஓடுமே''.

# கந்தவேள் கருணை



## [31]

### டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார்

சூரன் மாநகருக்கு அனுப்பியிருந்த பகன், மதுரன் முதலிய ஒற்றர்கள் முருகப் பெருமானின் சேனைகளைக் கண்டு திரும்பி வந்தார்கள். அவர்கள் அசுரபதியை வணங்கி, 'நாளையே இங்கு வந்து யுத்தம் செய்வது என்று முருகன் இப்பொழுது முடிவு செய்துள்ளான்'' என்று கூறினர்.

மந்திரிகளையும் சேனாதிபதிகளையும் தமது புதல்வர்களையும் அழைத்தான் சூரன். மந்திராலோசனை தொடங்கியது; மந்திராலோசனை நடக்கும் பொழுது வேறு யாரும் உள்ளே இருக்கக் கூடாது; வண்டு உருவத்தில் வந்து கூட தேவர்கள் ரகசியங்களை அறிந்து செல்வார்கள். ஆகவே, 'அழைத்தவர்களைத் தவிர ஈ எறும்புகூட அங்கிருக்கக்கூடாது' என ஆக்ஞையிட்டான் சூரபன்மாசுரன்.

மந்திராலோசனை மண்டபத்தில் மன்னர் மன்னனாகிய சூரபன்மன் பேசலானான். 'துணைவர்களே! அமைச்சர்களே! நமது பகைவர்களாகிய தேவர்களை நீங்காத சிறையிலிட்டேன். தேவர்களின் சிறையினை நீக்குவதற்காக சிவபெருமான் ஒரு குமாரனைப் பெற்று இங்கு அனுப்பி வைத்தார். பூவுலகம் வந்த அந்தக் குமரன் கிரவுஞ்ச மலையை அழித்தான்; தாரகனைக் கொன்றான். அதன்பின் கடற்கரையில் வந்திருந்து, ஒரு தூதனை என்னிடம் அனுப்பினான். அத்தூதன் இலங்கை மலையில் பாய்ந்து அதனை அழித்தான். அஞ்சாமல் வந்து என் அவைக்களத்தில் வீற்றிருந்து சில வார்த்தைகள் பேசினான். என் கண்முன்னே சில அசுரர்களைக் கொன்றான். இந்த நகரை பாதிகுமேல் அழித்துவிட்டான். என் அருமந்தப் புதலவன் வச்சிரவாகுவைக் கொன்றுவிட்டான். தூதனாய் வந்து இவ்வளவு அட்டூழியங்களைச் செய்த அவனைப் பிடித்துச் சிறையில் தள்ளினேன் இல்லை; கொன்றேன் இல்லை. பெரும் பழியைப் பெற்றுவிட்டேன். அது மட்டுமல்ல; அந்தத் தூதன் வீரமகேந்திரபுரியிலிருந்து திரும்பிச் சென்றபோது, நம் பெரும் காவலாள் யாளிமுகனையும் கொன்றுவிட்டான்.''

''துணைவர்களே, கவனமாகக் கேளுங்கள். தூதனுப்பிய குமரன் கடலைத் தாண்டி இங்கு வந்து நம்மோடு போர் புரியவும் துணிந்திருக்கிறானாம். இந்தத் தகவலை ஒற்றர்கள் வந்து சொல்லுகிறார்கள். நானே சென்று இமைப்பொழுதில் சேனைகளையும், வீரர்களையும் அந்தக் குமரனையும் வென்று ஒழித்துவிடலாமா என்று கூட எண்ணினேன். ஆனால் சூரன் என்னும் பெயர் பெற்ற நான் -எண்ணற்ற படைபலம் பொருந்திய நான்-போயும் போயும் பூதர்களுடனும் பாலகனுடனும் போர் செய்வதா என்று நினைந்து வாளாவிருந்துவிட்டேன். எத்தகைய வீரமும் வலிமையும் செல்வமும் ஒருவர் பெற்றிருந்தாலும் தம் துணைவர்களுடன் ஆராய்ந்தே ஒரு செயலைச் செய்ய வேண்டும். ஆகவே தான் உங்கள் யாவரையும் இங்கு கூட்டியுள்ளேன். நாம் என்ன செய்வதென்று ஆராய்ந்து சொல்லுங்கள்.''

சூரபன்மனின் அமைச்சர்களில் எருமை முகம் அமைந்த மகிஷன் சூரபன்மனை வணங்கிக் கூறினான்; 'அரசே, திருமாலையே வென்றவர் உங்கள் தம்பி தாரகாசுரன். அவரையும் கிரௌஞ்ச மலையையும் வென்ற வீரனைச் சிறுவன் என்று கூறுவது சரியாகுமா? கடலைத் தாண்டி வந்து நம் நகரத்தை அழித்ததோடு வச்சிராவாகுவையும் கொன்ற துஷ்டனை சாமானிய தூதன் என்று கருதுவது பொருத்தமானதுதானா? உமது தம்பியும் கிரௌஞ்ச மலையும் அழிந்த அன்றே அந்தச் சிவகுமாரன் மீது போருக்குப் போயிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் அந்தத் தூதன் வந்து இங்கு அட்டூழியம் செய்திருக்க முடியுமா? போகட்டும், கடந்ததை எண்ணி வருத்தப்படாமல் இன்றே செயலில் இறங்குங்கள். நால்வகைச் சேனைகளோடும் சென்று போர் புரிவோம். முன்னைப் போல் அஜாக்கிரதையாக இருந்து காலந் தாழ்த்திவிடலாகாது.''

மகிஷன் கூறி முடித்ததும், மற்றொரு அமைச்சனாகிய துர்க்குணன் எழுந்தான். ''அரசே! தாங்கள் இதுவரை திருமாலோடும் மற்றைய தேவர்களோடும் போர் செய்வதற்கென்று சென்றதில்லை. உமது தம்பிமார்களைக் கொண்டே அவர்களை எல்லாம் போரில் வென்றீர்கள். அப்படிப்பட்ட தாங்கள் இன்றைக்கு ஒரு சிறுவனை எதித்துப் போருக்குச் செல்வதா? தவத்தைப் பெருக்கி அழியாத வரங்களையும், அளவற்ற ஆயுளையும் வீரத்தையும் பெற்றுக் கொண்டதெல்லாம் ஒரு சிறுவனோடு போர் புரிவதற்குத்தானா? சிறுவனுக்காக வந்த தூதனைத் தொடர்ந்து நீங்கள் போக வேண்டுமா? கொசுவைக் கொல்லச் சிம்மமா செல்வது? நமது படைத்தலைவர்களை அனுப்பி வைத்தால் அவர்களே அந்தப் பூதகணங்களையும் சிவகுமாரனையும் வென்று வருவார்கள். இது திண்ணம்' என்று கூறினான்.

தலைமை அமைச்சனாகிய தருமகோபன் எழுந்தான்; 'அரசர்க்கரசே! அச்சிறுவனுடன் சக்கரவர்த்தி போர் செய்வது புன்செய் நிலத்தை நவரத்தினங்கள் பதித்த பொற்கலப்பையால் உழுவது போலத்தான். அவன் உங்களைக் கண்டதும் புறமுதுகு காட்டி ஓடிவிடுவான். அப்படிஅவன்



ஓடிவிட்டால், 'கேவலம் இந்தச் சிறுவனுடனா போர் புரிய வந்தோம்' என்று நீங்கள் எண்ணி அவனைத் தொடர்ந்து சென்று கொல்லாமல் மன் னித்து விட்டு வந்துவிடுவீர்கள்; அவனுக்கு அழிவு ஏற்படாது. தனக்குச் சமானமில்லாதவர்களுடன் அறிஞர்கள் போர் செய்ய மாட்டார்கள். உங்கள் குமாரர்களான அக்கினிமுகன், இரணியன் இருவ ரில் ஒருவரை அனுப்பினாலே போதும். நகத்தால் கிள்ளியெறியும் முளையை வாளால் வெட்டுவார் களா? சிவபெருமான் கொடுத்த வேலாயுதத்தை அச்சிறுவன் செலுத்தியதும் அதற்கு மாறான படையை விடுக்காததால் தாரகன் மாண்டான். இதை வைத்து அந்தச் சிறுவனை வீரன் என்று கருதுகிறீர்களா? கிரௌஞ்சமலை அழிந்தது என்று சொலகிறார்கள். ஆனால் கிரௌஞ்ச மலைக்கு அகத்தியரின் சாபத்தினால்தான் அழிவு வந்தது என்பதை மறப்பதற்கில்லையல்லவா? அழி யாத தேர், கவசம், வில் முதலியவற்றை வச்சிர பாகுவுக்குக் கொடுக்கவில்லை. அவைகள் இல்லாத தால்தான் முருகனின் தூதன் வந்து தாக்கியபோது வச்சிரவாகு இறந்தான். இனி பலப்பல சொல்ல வேண்டாம். அந்தச் சிறுவனையும் அவனுடன் உள்ள மற்ற வீரர்களையும் இங்கிருந்தே பாணம் போட்டு நான் கொன்றுவிடுகிறேன். அல்லது ஒரு சேனாதிபதியை அனுப்பி வைத்தால் அவனே முருகனை வென்றுவிடுவான்'' என்று கூறினான்.

தருமகோன் சொல்லி முடித்ததும் உடல் லுங்கச் சிரித்தான் காலசிந்து என்ற அமைச்சன். என்ன பெரிய பிரமாதமான காரியம்? திருச்செந் ரில் வந்திருக்கும் சிறுபாலனை அநாயாசமாகத் ரத்துவதற்கு மந்திராலோசனை செய்ய வேண் யதில்லையே! இதோ என்னை அனுப்புங்கள். நான் சென்று அந்தச் சிறுவனையும் அவனுடைய பூதப்படைகளையும் காலபாசத்தால் கட்டி இழுத்துக் கொண்டு வருகிறேன்'' என்று கூறினான்.

காலசிந்து கூறியதைக் கேட்ட சண்டன் எழுந்து தன்னொருவனை அனுப்பி வைத்தாலே போதுமென்றான்.

அசுரர்படைத் தலைவனான அனலி கோபத் துடன் எழுந்தான். ''ஏதோ ஒரு முடிவு உடனேயே செய்வோம். அற்பச் சிறுவனை அழிப்ப தற்காக இன்னமும் மந்திராலோசனை செய்வது அவமானம்'' என்று கூறினான்.

விழிகளில் தீப்பொறி பறக்க எழுந்தான் சிங்கன். ''அரசே! இந்த அண்டத்தில் உள்ளவர்கள் எல்லோரும் வந்து என்னுடன் போர் செய்தாலும் நான் ஒருவனே தனித்து நின்று யுத்தம் செய்து அவர்களை வெல்லுவேன். என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்வது சரியல்ல. போருக்குச் செல்ல உத்தரவு கொடுங்கள். பகைவர்களைக் கண்டதுண்டமாக வெட்டி வீழ்த்தி வெற்றியுடன் வருகிறேன்'' என்றான்.

சூரபன்மனின் புதல்வர்களில் ஒருவனான இரணியன் எழுந்தான். ''தநதையே! முன்பே எனக்கு உத்தரவு கொடுத்திருந்தால் அந்தப் பகை வர்களையெல்லாம் வென்று சரியான பாடம் புகட்டியிருப்பேன்'' எனறான்.

இரணியனின் தம்பியான அக்கினிமுகாசுரன், சூரபன்மனை நோக்கி, ''அப்பா! தாங்கள் போவானேன்? அல்லது நான்தான் போவானேன்?

இதென்ன பெரிய காரியம்? என்னுடைய ஆட்களை அனுப்பினாலே போதும். நம் பகைவர்கள் அவ்வளவு பேர்களையும் கொன்றுவிட்டு வருவார்கள்'' என்றான்.

இப்படியாக அனைவரும் பலப்பல பேசுகையில் சூரபன்மனின் மூத்த மகனும் வீராதி வீரனுமான பானுகோபன் கம்பீரமாக எழுந்திருந்து பேசலானான்.

''தந்தையே! பெரியோர்களே! சகாக்களே! வணக்கம். சென்று போனதை எல்லாம் பேசிப் பயனில்லை. இப்பொழுது நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். நம்முடைய எதிரிகளின் பலத்தை மிகையாகக் கூறுவது தவறு எனில், ஒரேயடியாக அலட்சியம் செய்வதும் தவறு. அந்தச் சிறுவனின் பலததையும், பூதர்களின் ஆற்றலையும் அறிய வேண்டுமானால், நானே போயாக வேண்டும். என்னை அனுப்பி வையுங்கள். சென்று மீளும்போது அவர்களைப் பாசத்தால் கட்டி இழுத்துக் கொண்டு வருகிறேன்'' என்றான் வீராவேசத்தோடு.

இதுவரை பேசியவர்களிடையே முருகனுடன் போரிடத்தான் வேண்டுமென்பதில் கருத்து வேறுபாடு இல்லை. போருக்கு யார் செல்வது என்பதில் தான் அபிப்பிராயபேதம். இப்போது அடிப்படையிலேயே அபிப்பிராய பேதம் கொண்ட சிங்கமுகாசுரன் எழுந்தான். சிம்மத்தின் தலை பெற்ற இவன் சூரபன்மனின் தம்பி, பெரிய விவேகி.

அண்ணன் சூரபன்மன் காலில் விழுந்து எழுந்து அதனபின் சிங்கமுகாசுரன் பேசலானான். ''மந்திராலோசனை கூறியவர்கள் எல்லோரும் அறிவுரை சொல்லவில்லை. அவ்வளவு பேரும் அறிவின்றி உளறினார்கள். அடியேன் சொல்வதைத் தாங்கள் கவனமாகக் கேட்டு வாழ வேண்டும். அண்ணா மயக்க உணர்வினால் மீன்கள் தூண்டில் முள்ளை உணவு என்று எண்ணி அதனைக் கடித்து அதனில் அகப்பட்டு வருந்துதல் போல, தேவர்களுக்குத் தீமை செய்வதால் இப்போது பெருமைப் பட்டாலும் இறுதியில் இன்னலே அடைவோம். தேவர்களைச் சிறையினின்றும் இன்னும் விடுதலை செய்யாத காரணத்தாலேயே ஆறுமுகக் கடவுள் போர் செய்ய வந்துள்ளார்.

அண்ணா செந்தில் மாநகரம் வந்துள்ள கந்தக் கடவுள் எத்தகைய சக்தி பொருந்தியவர் என்பதைத் தாங்கள் ஏற்க மறுப்பது நமக்கு அபாயமாகவே முடியப் போகிறது..''

''நரகத்துக்குப் போய்த் துன்பப்படுபவர் யார்? பெரியவர்களுக்குத் துன்பம் செய்தவர்கள், குழந்தைகளுக்குத் தீங்கு செய்தவர்கள், பெண்களை இம்சித்துக் கொல்கிறவர்கள், விரதம் இருப்போருக்குக் கெடுதல் செய்வோர்; தான தருமம் செய்வோரைத் தடுப்போர் ஆகிய இவர்களெல்லோரும் நரகங்களுக்குச் சென்று துன்புறுவார்கள். ஆகவே, அண்ணா! தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் தாங்கள் தீங்கு செய்வது நியாயம் அல்ல'' என்று சிங்கமுகாசுரன் கூறினான்.

''குரவரைச் சிறுபாலரை மாதரைக் குறைதீர்
விரத நற்றொழில் பூண்டுளோர் தம்மை,மேலவரை
அருமறைத்தொழி லாளரை ஒறுத்தனர் அன்றோ
நிரய முற்றவும் சென்று சென்றலமரும் நெறியோர்'
(நிரயம்-நரகம்)

---

## இயக்குபவன் இறைவன்

உலகம் எனும் நாடக மேடையில் பல நடிகர்கள் இருக்கிறார்கள். இறைவனாகிய இயக்குனர் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட பாத்திரத்தை அளிக்கிறான். ஒவ்வொருவரும் தனது பாகத்தைச் செவ்வனே செய்வதற்குத் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு இயக்குனரின் ஒவ்வொரு உத்தரவினையும் தவறாமல் கடைபிடிப்பதாலேயே நடக்க முடியும்.

—ஸ்ரீ சத்திய சாயி பாபா

---

இவ்வாறு தம்பி கூறி வருவதைக் கேட்ட சூரபன்மன் இடைமறித்துக் கோடையிடி போல் சிரித்தான், சிங்கம்போல் கர்ஜித்தான். 'தம்பி'. நன்றாயிருக்கிறது உன் பேச்சு! உனக்குப் புத்தி மயக்கம் ஏற்பட்டுவிட்டதா? யாரிடம் யாரைப் பற்றிப் பேசுகிறாய்?''

''இளைய சகோதரா! எனக்குச் சிவபெருமான் கொடுத்த வரம் அழியாததன்றோ! நமது சக்தி ஒன்றே உன்னை வெல்லும், வேறு எவரும் வெல்ல முடியாது' என்று சிவபெருமான் கூறியது பொய் யாகுமா? வரத்தைக் கொடுத்தவரே அழிப்பாரா? தாரகன் இறந்தான் என்றால் அவன் என்னைப் போல் அரிய தவம் செய்து அழியா வரத்தைப் பெறவில்லை. வச்சிரவாகு சிறுவன். வலிமை குறைந்தவன், ஆதலால் இறந்தான். ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆட்சிபுரிந்து தேவர்களை ஏவலர்களாக்கிக் கொண்ட என்னை யார் வந்து எதிர்த்தாலும் என்னிடம் தோற்றுவிடுவார்கள்.

மும்மூர்த்திகளாலும் வெல்ல முடியாத வலிமையுடைய தம்பீ! நமக்கு ஏவல் புரிந்து இன்னமும் மறைந்திருக்கும இந்திரனுக்கும், தேவர்கட்கும், சிறு பாலனுக்கும் கயிலையில் காவம் புரியும் பூதர்களுக்கும் அஞ்சினை; உன அறிவு இழந்தனையோ?

''ஏவல் தொண்டுசெய் தின்னமும் கரநதஇந்
திரற்கும்
தேவர்க் குஞ்சிறு பாலற்கும் சிவனுறை கயிலை
காவல் பூதர்க்கும் அஞ்சினை கருத்தழிந் தனையோ
மூவர்க் கும்வெலற் கரியதோர் மொய்ம்பு
கொண்டுடையோய்!''

அப்படியிருக்க, என்னிடம் வந்திருக்கும் சிறு பாலகன் என்னை வெல்ல முடியும் என்று நீ நினைப்பது 'கண்ணில்லாதவன் சூரியனைப்பழம் என்று காட்ட, கையில்லாதவன் அதனைப் பிடித்து கொண்டான்!' என்பதைப் போலிருக்கிறது' என்றான் சூரபன்மன்.

''எண்ணி லாததோர் பாலகன் எனைவெல்வன்
என்கை
விண்ணி லாதவன் தன்னையோர் கனியென
வெஃகி
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன்போய்
உண்ணி லாதபேர் ஆசையால் பற்றுமா(று)ஒக்கும்'

இவ்வாறு மூர்க்கத்தனததில் ஊறிப்போய்ப் பிடிவாதமாகப் பேசிய சூரனிடம் சகோதர வாஞ்சை கொண்ட சிங்கமுகாசுரன் மேலும் முருகன் பெருமைகளையும் உண்மைகளையும் நீதிகளையும் எடுத்துரைக்கலானான்.

''அண்ணா, தமக்கு ஒரு மூல காரணம் இல்லாத சுத்த மயாதீதராகிய சிவபெருமான் தூய சந்திரனைத் தரித்த சடைமுடியும், பவள மலை போன்ற திருமேனியும் நான்கு திருப்புயங்களும், திருநீலகண்டமும் கொண்டு நின்றனர்.

''வாலி தாமதிச் சடிலமும் பவளமால் வரையே போலு மேனியும் முக்கணும் நாற்பெரும் புயமும் நீல மாமணிக் கண்டமும் கொண்டுநின் றனனால் மூல காரணம இல்லதோர் பராபர முதல்வன்''

தமக்கு ஒப்பில்லாத தனிப்பெருங் கடவுள் இவ்வாறு திருவுருவங்கொண்டது என்ன காரணம் என்று வினாவுவாயாயின், ஐம்பெருந்தொழில் களைப் புரிந்து ஆன்மாக்களைப் பந்தித்த பாசங்களை நீக்கி, வீடுபேறு வழங்கியருளும்படி தமது திருவுள்ளத்தில கொண்டருளிய பெருங்கருணையே யாகும்.

''தன்னை நேரிலாப் பரம்பொருள் தனியுருக் கொண்ட
தென்ன காரணம் என்றியேல் ஐந்தொழில் இயற்றி
முன்னை ஆருயிர்ப் பாசங்கள் முழுவதும் அகற்றிப்
பின்னை வீடுபே றருளுவான் நினைந்தபேரருளே.''

தேவரைச் சிறை வைத்த நின்னை வரம் தந்த தாமே அழிப்பது முறையன்று; வரத்தினால் பெருமை பெற்ற உனனைப் பிறராலும் அழிக்க முடியாது; என்று சிவபெருமான் திருவுளங் கொண்டு, தமது திருவுருவாகிய ஒரு திருக்குமாரரைக் கொண்டு கொல்ல நினைத்தருளினார்.

''வரம ளித்தயாம் அழிப்பது முறையன்று வரத்தால்
பெருமை பெற்றுள சூரனை யடுவது பிறர்க்கும்
அரிதெ னப்பரன் உன்னியே தன்னுரு வாகும்
ஒருமு கற்கொடு முடித்துமென் றுன்னினான் உளத்தில்''.

சிவந்த திருமேனியும், ஆறு திருமுகங்களும், பன்னிரு திருத்தோள்களும் உடைய திருக்குமாரரை ஆதி முதல்வராகிய சிவபெருமான் தமது நெற்றிக் கண்களிலிருந்து தோற்றுவித்தருளினார்.

''செந்நிறத் திருமேனியும் திருமுகம் ஆறும்
அன்ன தற்கிரு தொகையுடைத் தோள்களு மாக
முன்ன வர்க்கு முன்னாகிய பராபர முதல்வன்
தன்னு தற்கணால் ஒருதனிக் குமரனைத் தந்தான்''

மனிதர்களிலும், விலங்குகளிலும், பறவைகளிலும் மற்றையோனிகளிலும் பிறந்து உழல்கின்றவர்களைப் போல் நீ நினைக்காதே; சிவபரஞ் சோதியின் நெற்றிக் கண்ணிலிருந்து வேதங்களையுங் கடந்து நின்ற விமலனார் திருவவதாரம் புரிந்தருளினார்.

''மானு டத்தரில்விலங்கினில் புட்களில் மற்றும்
ஊன முற்றுழல் யாக்கையில் பிறந்துளார் ஒப்ப
நீநி னைக்கலை பரஞ்சுடர் நெற்றியந் தலத்தே
தானு தித்தனன் மறைகளுங் கடந்ததோர் தலைவன்''.

சீலம் இல்லாதவர்களால் உணர முடியாத ஞான மூர்த்தியைப் பாலன் என்று இகழ்ந்தனை; சிறிய ஒரு ஆலம் விதையில் மிகப் பெரிய ஆல மரம் யாவும் ஒடுங்கியிருந்து தோன்றியது போல் எல்லாப் பொருட்களும முன்னாளில் அவரிடத்தினின்றுந் தோன்றின.

''சீலம் இல்லவர்க் குணரவொண் ணாதசிற் பரனை
பாலன் என்றனை அவனிடத் திற்பல பொருளும்
மேலை நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஒடுங்கியே அவதரித் ததுபோல்''

குமரக்கடவுள் அருவமும் ஆவர்; உருவமும் ஆவர்; உருவருவமும் ஆவர்; நிமித்த காரணமும் ஆவர்; செயப்படு பொருளும் ஆவர். அப் பரமனுடைய திருவிளையாடலை யாவரே சொல்ல வல்லவர்?

இவ்வாறு சிங்கமுகாசுரன் முருகனுடைய அருமை பெருமைகளை சூரபன்மனின் உள்ளததில் படுமாறு இனிதே எடுத்துச் சொல்லுகிறான். இன்னும் அவன் முருகனுடைய பெருமையை எடுத்துச் சொல்லும் நயமான பகுதிகளை வரும் இதழில் கண்டு மகிழலாம்.

(தொடரும்)

## தென்காசி கோயிற் கல்வெட்டுப் பாடல்கள்

''மனத்தால், வகுக்கவும் எட்டாதகோயில் வகுக்க முன்னின்று
எனைத்தான் பணிகொண்ட நாதன் தென்காசியை என்றும் மண்மேல்
நினைத்தாதரஞ் செய்து தங்காவல் பூண்ட நிருபர் பதந்
தனைத்தாழ்ந் திறைஞ்சித தலைமீதில் யானும் தரித்தனனே''

''ஆராயினும் இந்தத் தென்காசிமேவும் பொன் ஆலயத்து
வாராததோர்குற்றம் வந்தால் அப்போது அங்கு வந்ததனை
நேராகவே யொழித்துப் புரப்பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன் பராக்கிரமபாண்டியனே''

''அரிகேசரிமன் பராக்கிரம மாறன் அரனருளால்
பரிசேர் பொழிலடி தென்காசிக் கோயில் வகுத்து வலம்
புரிசேர் கடப்புவி போற்றவைத் தேன்; அன்பு பூண்டிதனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார் பொற்பாதம் என சென்னியதே''

''சாத்திரம் பார்த்திங்குயான் கண்ட பூசைகள் தாம் நடாத்தி
ஏத்தி அன்பால் விசுவநாதன் பொற்கோயில் என் றும் புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்கிரம மாறன் பரிவுடன் நம
கோத்திரத் தன்னிலுள் ளார்க்கும் அடைக்கலங் கூறினனே''

—அரிகேசர பராக்கிரம பாண்டியன்




எம். சுப்பிரமணியம், எம்.ஏ.,

ஆடித்திங்கள், சேலம் மாநகருக்கு எழிலூட்டும் மாதம். ஆம். ஆடித்திங்களில்தான், மாங்கனி நகர் எனப் புகழ் பெற்ற இம் மாநகரில் மாரியம்மன் திருவிழா பெருஞ்சிறப்போடு வரும்.

எட்டுப்பேட்டைகளிலும் எழிலூட்டும் அருள் விழா.

சேலம் கோட்டை மாரியம்மன்.
செவ்வாய்ப்பேட்டை மாரியம்மன்.
குகை மாரியம்மன்.
அன்னதானப்பட்டி மாரியம்மன்.
அம்மாப்பேட்டை மாரியம்மன்.
பால்கடை சின்ன மாரியம்மன்
சஞ்சீவிராயன்பேட்டை மாரியம்மன்.
பிசுலு (வெயில்) மாரியம்மன்.

என எங்கு நோக்கினும் ஒன்றாக மாரியம்மன் திருவிழா. விழாவிற்கு மேலும் மெருகூட்டுவது சேலம் பொருட்காட்சி.

அம்பிகைக்கு உகந்த மாதங்களில் ஆடித் திங்கள் ஒன்று. இம்மாதத்தில் அம்பிகைக்கு விழா எடுத்துக் கொண்டாடுதல் சாலச்சிறந்தது.

''ஆடித்திங்கள் அகவையின் ஆங்கோர்பாடி விழாக்கோள் பன்முறை எடுப்ப நாடு மலிய மழை பெய்தது'' எனச் சிலப்பதிகாரம் இப்பண்டைய மரபுக்குச் சான்று காட்டுகின்றது.

'நாடு மலிய மழை பொழிய வேண்டும்' இதுவே இவ்விழாவின் முக்கிய நோக்கமாகும்.

நிலத்தை பூமித்தாய்— நீரை கங்கை—வானை ஆகாயவாணி என இயற்கைப் பொருள்கள் அனைத்தையும் பராசக்தியின் அம்சமாகக் காணுவது நம் ஆன்மீக மரபு.

இம்மரபுகளை ஒட்டியே மழையை உலகு புரக்கும் (காக்கும்) மாரியாக-மாரியம்மனாகக் கொண்டாடுகின்றோம்.

''மாரியும் உண்டுண்டு உலகு புரப்பதுவே'' என புறநானூறு, மழை உலகு புரக்கும் செயலைச் செய்கின்றதென்று புகழும்.

விழாக்களில் புறத்தூய்மை அகத்தூய்மை இரண்டும் முக்கியமானவை. புறத்தூய்மை நீரான் அமையும் என்றார் தெய்வப் புலவர்.

மகா கவி பாரதியோ புறத்தூய்மை தரும் நீரை அதன் தெய்வத்தை-மாரியாகக் கொண்டு- ''துணி வெளுக்க மண்ணுண்டு எங்கள் முத்து மாரியம்மா-மனம் வெளுக்க மாரியே மார்க்கம் காட்டு'' என வேண்டுகின்றார்.

அகம், புறம் இரண்டின் தூய்மைக்கும் இம் மாரியம்மன் பெருந்திருவிழா பெருந்துணை புரிகின்றது.

சேலம் மாநகரின் மையத்தில் ஓடும் ஆறு திருமணிமுத்தாறு. இவ்வாற்றின் கரையில் அமைந்திருந்த கோட்டைக்குள் கோட்டை பெருமாள் கோயில், கோட்டை மாரியம்மன் கோயில் என்பன அமைந்துள்ளன. இக்கோட்டை இன்று காணப்பெறவில்லை.

கோட்டைமேடு, மாரியம்மன் ஆலயத்தின் மேற்குத் திசையில் அமைந்துள்ளது. கோட்டை மேடு, கோட்டை மாரியம்மன் ஆலயம் இரண்டிற்கும் நடுவில் கோட்டை பெருமாள் கோயில் அமைந்துள்ளது.

இவ்வாலயங்களின் தென்புறத்தில் குண்டு போடும் மேடு ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. ஆங்கிலேயர் காலத்தில் பீரங்கி குண்டுகளை வெடித்து நேரத்தை மக்களுக்கு அறிவித்து வந்தனர். சிதையாமல் அம்மேடு இன்றும் உள்ளது.

அதன் தெற்கே புலிகுத்தி வீரன் சிலையும், புலிக்குத்தித் தெருக்களும் ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளன.

சேலம் மாவட்டம் வானம் பார்த்த பூமி. இங்கு மழையை நம்பியே அனைத்தும். இம்மாவட்டத்தில் ஓடும் காவிரி 1000 அடிகளுக்குக் கீழே ஓடுகிறது. எனவே காவிரியின் நீர் இங்குப் பாசனத்திற்குப் பயன்படாது.

''இந்த மழையை நம்பி, இருந்த சோளம் நாவிதைச்சேன் வந்தமழை போகுதல்லோ வழி பார்த்த பூமியிலே'' என்று இங்குக் கிராமத்து மக்கள் மழைக்காக ஏங்கி நிற்பர்.



**சேலம் மாரியம்மன் பண்டிகையில் நடைபெறும் வண்டிவேடிக்கை**

ஆடிமாதம் பிறக்கும். இங்குத் தாய்மார்கள் ''மாரி வருவாளாம் மனக்கவலை தீர்ப்பாளாம்'' என்று அவள் அருள்வேண்டி முத்தெடுத்துப்பாடி வரும் காட்சியை இன்றும் காணலாம்.

வெப்பும் குருவும் தொடர (சிலப்பதிகாரம்) வருந்தி இருந்த மக்கள் இம்மாரியால் மனம் குளிர வேண்டுகின்றனர். எனவே இவ்விழா மழைக்கு வரவேற்பு கூறும் விழாவாகவேதனை தீர்க்கும் விழாவாக அமைந்து இருக்கின்றது.

பூச்சாட்டுதல்-கம்பம் நடுதல்— சக்தி அழைத்தல்— உருளு தண்டம் (அங்கப்பிரதட்சணம்) பொங்கலிடல்—சத்தாபரணம்' என விழாவில் பல அம்சங்கள் அமைந்துள்ளன.

விழாவின் தொடக்கமான பூச்சாட்டலுக்கு கோட்டை பெரிய மாரியம்மன் ஆலயத்தில் இருந்து மற்ற பேட்டை மாரியம்மன்களுக்குப் பூவெடுத்துச் செல்லல் மரபு. எனவே இவ்வன்னை பெரிய மாரியம்மன் ஆகின்றாள்.

பொங்கலில் பெருத்தவள் கோட்டை மாரியம்மன் செல்வத்தில் பெருத்தவள் செவ்வாய்ப்பேட்டை மாரி, வேடிக்கையில் பெருத்தவள் குகை மாரியம்மன் என விதம் விதமாக மக்கள் அன்னையை மகிழ்ந்து பாராட்டுவர். குகை மாரியம்மன் கோயிலில் நடைபெறும பூ மிதித்தலும், வண்டி வேடிக்கையும் காணக் கண்கோடி வேண்டும்.

சேலம் நகர்ப் பேருந்து நிலையம் அருகில் கோட்டை மாரியம்மன் ஆலயம் அமைந்துள்ளது. தற்போது ராஜகோபுரத் திருப்பணி நடைபெற்றுக் கொண்டுள்ளது. கிழக்கு நோக்கி அமர்ந்துள்ளாள் அம்மன்.

பலநூறு பக்தர்கள் ஒன்றாக சேவிக்கும் வண்ணம் முன் மண்டபம். சன்னதியின் வலப்புறம் திருக்கோயில் அலுவலகம் — இடப்புறம் திருக்கோயில் திருமண மண்டபம், பின்புறம் திருமணிமுத்தாறு, முன்புறம் (வலப்புறம்) வடக்கு நோக்கிய ராஜகோபுரம். இடப்புறம் ஆலயக் கட்டிடங்களின் கடைகள் என ஆலயம் பொலிவுடன் உள்ளது.

இவ்வாலயத்தின் கிழக்கே சப்த கன்னமாரோடையும் குன்றின்மேல் அமர்ந்த குமரகிரிக் கோயிலும், ராஜகணபதி ஆலயமும், தெற்கில் ஊத்துமலை குமரன் கோயில், குகை காளியம்மன் மாரியம்மன் ஆலயங்களும், மேற்கில் உத்தம சோழபுரம் கரபுரநாதர் ஆலயமும் கஞ்சமலை சித்தேஸ்வரர் ஆலயம் கோட்டை அழகிரிநாதர் ஆலயம் ஆகியனவும், வடக்கில் சேர்வராயப் பெருமாள்

ஆலயம், சுகவனேஸ்வரர் ஆலயமும் அமையப் பெற்றுள்ளன.

கிழக்கில் ... நாமமலை

தெற்கில் ... கரிய பெருமாள் மலை

மேற்கில் ... கஞ்சமலை

வடக்கில் ... சேர்வராயன் மலை.

என நாற்புறமும் மலைகளால் சூழப்பட்டிருக்கின்றாள் அன்னை.

லெப்பனு என்ற ஆங்கிலேயர் 1816 சேலம் கெஜட்டில் சேலம் சுகவனேஸ்வரர் திருக்கோயில், கோட்டை மாரியம்மன் ஆலயம் மற்றும் கோட்டை அழகிரி பெருமாள் ஆலயத்திற்கு தஸ்திக் தொகை வழங்கிய செய்தி குறிப்பிடப் பெற்றுள்ளது.

ஆலய அலுவலகத்தில் உள்ள கல்வெட்டு பின் வரும் செய்திகளைத் தெரிவிக்கின்றது.

*(1) ''1876 இந்த சத்திரம் தாது வருஷம் சித்திரை மாதத்தில் கோட்டை மாரியம்மன் பேரினால் அதில் ஜனங்கள் வந்து யிறங்கப் பட்ட வாசிகள் யாரும் தடை செய்யாமல் இருக்க முத்துக் குமரப்பிள்ளை பெண்ஜாதி பட்டக்கார பார்வதியம்மாளும் குமாரன் மதுரை முத்துப்பிள்ளை இவர்கள் இருவருடைய சொத்தைப் போட்டுப் கட்டி வைத்த தர்ம சத்திரம். இப்படிக்குப் பார்வதியம்மாள்''.*

*(2)* திருக்கோவில் முகவர் வடபுற சுவற்றின் மேல் பகுதியில் ''சேலம் தாயம்மாள் குமாரத்தி நாகம்மாளால் ஜீர்னோத்தமாகியது வருஷம் 1881 நவம்பர், 8'' என்ற கல்வெட்டு உள்ளது.

மண்ணுயிர்ப்புவனம் ஏனை மற்றுள பொருளுக்கெல்லாம் அன்னையாய் உதவி நாளும் நற்கருணை வளர்க்க எம்பெருமாட்டி காசியில் -விசாலாட்சி, காஞ்சியில் - காமாட்சி, தில்லையில் - சிவகாமி, மதுரையில்-மீனாட்சி, சமயபுரத்தில்-மாரியம்மன், கோவையில்- கோனியம்மன், தண்டுமாரியம்மன், கன்யாகுமாரியில் குமரியம்மன் எனப் பல்வேறு திருமேனிகளைத் தாங்கியவள் இங்கு சேலத்தில் காவல் தெய்வமாக கோட்டையில் அமர்ந்த பெரிய மாரியம்மனாக அருள்பாலிக்கின்றாள்.

பெரும்பாலும் ஆகஸ்ட் முதல் வாரத்தில் சேலத்தில் மாரியம்மன் பண்டிகை வெகுசிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சேலம் சென்று எட்டுப் பேட்டை மாரியம்மனையும் தரிசித்துப் பேரானந்தப் பெருவாழ்வு பெறுவீர்களாக!

— — —



# கோட்டுக அருள் முரசு

—டாக்டர் த. அமிர்தலிங்கம்

வேலையா வேலையா—என்
வேதனைகள் தீர வழி கூறையா?

(வேலையா)

சேவடிக்கு மலர் தொடுத்துத் தினம்
கொடுப்பேன் - நீ
மாத மொரு மலர் கொடுக்க வேண்டுமையா
எச்சகமும் உன்னுடைய விளையாட்டு-இதில்
அச் சகமும் அருள்கூட்ட வழிகாட்டு.

(வேலையா)

தமிழருக்கு உவப்பான தமிழரசு-நீ
புவியாவும் காத்து நிற்கும் புவியரசு
கொடியவர்க்கும் அருள்புரியும் அருளரசு-நீ
கொடியவர்க்கும் அருள்புரியும் அருளரசு-என்
துயர் ஓடக் கொட்டிவிடு அருள்முரசு.

(வேலையா)

ஒருபுறம் அடியானால் பொறுத்திடலாம்
பலபுறம் இடிஇங்கே யார் பொறுப்பார்?
''திருக்கோயில்'' வலம் வந்து நான்
தொழுதேன்!—உன்
திருப்பாதம் அருள் செய்ய நான் அழுதேன்.

(வேலையா)

# பரஞ்சோதியார்

எக்காரியம் செய்தாலும் பெரியோர்கள் தங்களது கடமையை மறக்க மாட்டார்கள். மதுரையில் மீனாட்சியம்மைக்கும் சிவபெருமானுக்கும் திருமணம் நிறைவேறியது. உணவுண்ண அனைவரையும் அழைத்தபோது, சிதம்பரத்தலம் உண்டாகக் காரணமாக இருந்த, தில்லைநாயகனான நடராசப்பெருமானின் அடியவர்களான வியாக்ரபாதர், பதஞ்சலி ஆகிய இருவரும் தினமும் தில்லையம்பல நாயகனான நடராசப் பெருமானின் தரிசனம் கண்டுதான் உணவுண்ணுதல் வழக்கம் ''நின்னருள் நடங்கண்டு உண்பது அடியேங்கள் நியமம்'' என்றார்.

# கண்ட

இறைவன் அப்போது சிவத்தலங்களின் பெருமையைக் கூறினார். ''உலகமான புருடனுக்கு நீங்கள் தரிசித்து மகிழும் சிதம்பரத்தலம் இதயம் போன்றது. திருக்காளத்தி கழுத்து. புருவமத்தி காசி. கயிலை உச்சி. மதுரை தலைக்குமேல் பன்னிரண்டு அங்குலம் தாண்டியுள்ளது துவாத சாந்தம்'' என்றார். நாம் தூங்கும்போது எல்லா உறுப்புக்களும் ஓய்வுபெற்று இதயம்மட்டும் வேலை செய்கின்றது. அதுபோல இரவு நேரத்தில் உலகத்திலுள்ள எல்லாத் தெய்வங்களின் சக்தியும் சிதம்பரத்தில் வந்து அடங்குகின்றன என்பது குறிப்பு.

''சிதம்பரத்தில் நாம் ஆடும் கோலத்தை மதுரையம்பதியிலும் கண்டு களிப்பீர்களாக'' எனக் கூறிய சிவபெருமான் ஒரு வெள்ளியம்பல மண்டபத்தை உண்டாக்கி அதன் மீது தோன்றி நடனமாடலானார்.

# நடராஜர்

தலையிலுள்ள கங்கை குலுங்கும் ஓசையும் கொன்றை மாலையில் உள்ள தேனைச் சாப்பிட மொய்த்த வண்டுகளின் இனிய ஓசையும், மங்கள கரமான மத்தள ஒலியும், வேதமந்திர முழக்கமும் கையிலுள்ள அக்னி சீறும் ஓசையும், ஆடும் திருவடிகளின் சிலம்பு ஒலியும் அன்பர்களின் செவிக்கு அமுதமாகப் பாயச் சிவபெருமான் ஆடியருளினார்.

கங்கையாறலம்பும் ஓசை: கடுக்கைவண்டிரங்கும் ஓசை:
மங்கல முழவின் ஓசை: மந்திர கீதஓசை:
செங்கையாடு எரியின் ஓசை: திருவடிச்சிலம்பின் ஓசை
எங்கணும் நிறைந்து அன்பர் இரு செவிக்கு அமுதமூற்ற''

என்ற கவிதைக் கண்ணாடி மூலம் ஆடிய திருக்கோலம் நம் மனக் கண்ணுக்கு நேராகக் காட்டப் பெறுகிறது.

# நடனம்

மகிழ்ச்சியடைந்த வியாக்ரபாதர் பதஞ்சலி இருவரும் மதுரையில் இதே திருக்கோலத்தில் என்றும் காட்சியளிக்க வேண்டும் என வரம் வேண்ட இறைவன் இன்றும் அவ்வாறே காட்சி யளிக்கிறார்.

சிவபெருமானை என்றும் நடனத் திருக்கோலத்தில் நிற்குமாறு வரங் கேட்டதும் அதற்கு இணங்கிய இறைவனது அருளையும் கண்ட சிவ கணங்கள் ''எம்பெருமான் நின்று கொண்டே இருந்தால் திருவடி நோகுமே! இப்படி ஒரு வரங் கேட்ட அடியார்களை என்ன சொல்வது. நடனத் திருக்கோலம் பிறப்பு இறப்பான பிணிகளை ஓட்டும் மருந்து. நோயினால் வருந்துபவர் மருந்தை வேருடன் பிடுங்கி அதன் சாற்றைப் பிழிந்து கொள்ளுதல் போலாயிற்றே'' என்கிறது கோயிற் புராணம்.

பன்னு கணத்தோர் தலைவன் வருத்தம்பாராதே
நின்னிலயத்து இந்நிலைதக நாளும் என்றாற்கு
என்னையுரைக்கோம்? இது பிணிகைக்குமெனில் எய்த்தோர்
தன்னை நறுக்கிச் சாறு கொள்வானும் தகும் என்றார்.

இராச சேகர பாண்டியன் என்னும் மதுரை மன்னன் ''சிவபெருமான் ஆடக் கூடிய நடனக் கலை தெய்வீகமானது. அதைச் சாதாரண மனிதனான நாம் ஆடக் கூடாது'' என எண்ணி பரத நாட்டியம் தவிர மற்ற அறுபத்தி மூன்று கலைகளையும் பயின்றான். சோழ தேசத்திலிருந்து வந்த ஒருவன் ''பாண்டிய மன்னரே? எம் அரசருக்கு 64 கலைகளும் தெரியும். உமக்கு அவைகளில் ஒன்றான பரத கலை தெரியாது'' எனக் கூறிச் சென்றான்.

---

## "நடராசன் அடிமை"

---

தான் ஒரு கலையை அறியாதிருப்பது பாண்டிய நாட்டிற்கே குறைவு எனப் பிறர் எண்ணுவதால் இராசசேகர பாண்டியன் பரத நாட்டியம் வல்லவர்களை அழைத்து அவர்களிடம் நாட்டிய சாத்திரத்தைப் பயின்றான்.

[பாண்டியன் பரத நாட்டியம் பயின்றான் என்று கூறும் இக்கால் மாறியாடிய படலத்தில் பரதநாட்டிய சாத்திரம் பூராவும்கூறப்படுகின்றது. திருவிளையாடற் புராணத்தில் வேதத்திற்குப் பொருள் அருளிச் செய்த படலத்தில் வேதத்தின் கருத்துக்கள் பூராவும் கூறப் பெற்றுள்ளன. மாணிக்கம் விற்ற படலத்தில் இரத்தின சாத்திரமும், மாணிக்கவாசகர் சரிதம் கூறுமிடத்துக் குதிரைகள் பற்றிக்கூறும் அசுவ சாத்திரமும், இறைவன் விறகாளாக வந்து வீணையை இசைத்துப் பாடிய இடத்தில் சங்கீத சாத்திரம் பற்றிய குறிப்புக்களும் காணப் பெறுகின்றன. நம் முன்னோர்களான பழந்தமிழர் எல்லாமறிந்தவர்களாக இருந்தார் என அறிந்து மனம் மகிழ்வோமாக].

இராச சேகர பாண்டியன் தான் நாட்டியம் பயிலும்போது தன் உடலுக்கு ஏற்பட்ட துன்பம் கண்டு ''இது ஆடிய திருக்கோலத்தில் காட்சியளிக்கும் எம்பெருமானுக்கும் இப்படித்தானே

துன்பமாக இருக்கும். ஒரே காலில் நிற்பது எவ்வளவு வலியுண்டாக்கும்? பிறவிக் கடலினின்று தூக்கி அடியாருக்கு இன்பமளிக்கும் இந்த நடனத் திருக்கோலத்தைத் தடுப்பது குற்றமாமே! ஆனால் எம்பெருமானின் திருவடி நோகுமே'' என மனம் நொந்து வருந்தினான்.

திருக்கோயில் சென்று மனமுருகி, திருவடிகளைத் துதித்து, அடியவர்களின் மனமான தாமரைகள் மலரும்படி ஆடிய ஞானக் கூடத்தைக் கண்டு மகிழ்ந்து கண்களில் நீர்வார சிரமேற் கரங்குவித்து ''பெருமானே! ஊன்றிய தாளை எடுத்து வீசி, தூக்கிய திருவடியை நிலம் மீது ஊன்றி, இன்று நான் காண கால்மாறியாடிக் காட்டி என் வேதனையைத் தீர்க்க வேண்டும். அன்றேல் நான் வாளைத் தரையில் நட்டு அதன் மீது பாய்ந்து என்னை அழித்துக் கொல்வேன்'' என்றான்.

நின்ற தாள் எடுத்து வீசி, எடுத்த தாள் நிலமீதூன்றி
இன்று நான் காண, மாறியாடி என் வருத்தமெல்லாம்
பொன்றுமா செய்தி! அன்றேல் பொன்றுவல் என்னா! அன்பின்
குன்றனான் சுரிகை வாள்மேல் குப்புற வீழ்வேன் என்னா.

பாண்டியனின் கவலை திருமாறு இறைவன் கால் மாறியாடி நின்றார்.

இறைவனுக்குக் கால் வலிக்குமே என வருந்திய பாண்டியனின் பக்தி மிகுந்த தாயுள்ளத்தைப் புகழ்வதா? அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட வேண்டுமென்று இடது காலை ஊன்றி வலது காலை எடுத்து வீசி இன்றும் அதே நிலையில் காட்சியளிக்கும் மதுரை வெள்ளியம்பல நாயகனைப் புகழ்வதா? எல்லாம் சிவகாமவல்லி சமேத நடராஜன் திரு அருளே.



இராசசிம்ம பாண்டியனுக்காக நடராசப் பெருமான் கால்மாறியாடிய திருக்கோலம்.

## இறைவனைத் தொழுவது இனியது!



இனியது எது? என்று வினவிய வடிவேல் குமரனுக்கு இறைவனைத் தொழுவதும், இறையடியாரைச் சேர்வதுமே இனியது என்று ஔவை உரைத்த அருந்தமிழ்ப் பாடல் இதோ:

''இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!
இனியது இனியது ஏகாந்தம் இனியது
அதனினும் இனியது ஆதியைத் தொழுதல்
அதனினும் இனியது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனியது அறிவுள் ளாரைக்
கனவினும் நனவினும் காண்பது தானே".

# திருவழுவூர்





# வீரட்டானம்

தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்.,

அட்டவீரட்ட தலங்களில் ஒன்றான இது திருமயிலாடுதுறையினின்றும் சங்கரன்பந்தல் செல்லும் வழியில் ஏழு கிலோ தொலைவில் உள்ளது. ஊழிக்காலத்து உலகம் எல்லாம் அழிந்த போது இந்தத்தலம் அழியாது வழுவிய காரணத் தால் வழுவூர் என்ற பெயரினைப் பெற்றது.

இங்குதான் யானையின் வடிவம் கொண்ட கயாசூரனை இறைவன் தன் கை நகங்களினால் கிழித்து தோலை உரித்துப் போர்த்ததாகப் போற் றப்படுகிறது. உரிக்க இயலா யானையின் தோலை இறைவன் உரித்தது அவனது ஈடு இணையற்ற முடிவிலாற்றலை உணர்த்துகிறது.

மும்மலங்களில் ஒன்றான ஆணவமலம் யானை யின் வடிவமாகக் கொள்ளப்படுகிறது. ஆணவ மலத்தை அழிக்க இயலாது; அடக்கத்தான் முடியும், எனவே யானையின் தோலை உரித்தது ஆணவ மலத்தை அடக்கியதாகத் தத்துவ ரீதியாகப் பொருள கொள்ளப்படுகிறது.

இறைவனது அளக்கலாகா ஆற்றலை உணர்த்தும் இச்செயலைத் திருவருட் செலவர் களில் ஞானவேந்தர் எனப் போற்றப்படும் திரு ஞானசம்பந்தப் பெருமான் பெருமளவில் (ஏறத்தாழ 155 இடங்களில்) போற்றிப் பரவிப் பாடியுள்ளார். தேவாரப் பதிகங்களில் பெரும் பான்மை அழிந்து போன காரணத்தால் அட்ட வீரட்ட தலங்களில் இந்தத் தலத்திற்கு மட்டும் பதிகம் இல்லைபோலும். இருப்பினும் இது வைப்புத் தலமாகத் திகழ்கிறது. இங்குள்ள அறுமுகன், அருணகிரிப் பெருமானின் திருப்புகழ் பெற்றவர்.

அட்ட வீரட்ட தலங்களில் கோயில்கள் பொது வாக மேற்கு நோக்கி இருக்க, 3 திருச்சுற்றுகளுடன் 5 நிலை கோபுரம் உடைய இந்தக் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயிலின் முன்பு உள்ள பஞ்ச பிரம தீர்த்தத்தில் 13 அமாவாசைகளில் நீராடி இறைவனிடம் ஒன்றி வழிபடுவோருக்கு புத்ரதோஷம் நீங்கி, மகப்பேறு கிடைக்கிறது.

இங்குள்ள மூலவரின் திருப்பெயர் திருக் கிருத்தி வாசகர் என்பதாம. இறைவியின் திருநாமம் பாலகுராம்பாள் (இளங்கிளை நாயகி) மகாமண்டபத்தில் கஜசம்ஹராரின் சந்நிதி உள்ளது. இவரது திருப்பெயர் வீரட்டேசுவரர். இங்குள்ள உட்புறச் சுவரில் இறைவனின் எட்டு வீரச்செயல் களும் ஓவியங்களாகத் தீட்டப் பெற்றுள்ளன.

கஜசம்ஹார மூர்த்தி வடிவம் பொதுவாகக் கோயில்களில் சிலா வடிவமாகத்தான் இருக்கும். ஆனால் இங்கு அது உலோகப் படிவமாக உள்ளது. கயாசூரனைக் கொன்ற களிப்பில் இறைவன் நடன மாடுகிறான். இதை அப்பர் பெருமான்,

> ''சிறந்து இமையோர் இறைஞ்சி யேத்த
> கொலை நவின்றகளி யானை உரிவை
> போர்த்துக் கூத்தாடி திரிதருமக் கூத்தர்''
> (திருவலம்புரம்—2)

என வெகு அழகாக அருளியுள்ளார். இறைவன் எக்களிப்பால் நடனமிடுவதைத்தான் இங்கு உள்ள திருவுருவில் எழிலாக உள்ள உடல் வளைவு உணர்த்துகிறது. பொலிவுடன் கூடிய இறைவ னின் உடலமைப்புக் கலை கண்களுக்குத் தெவிட் டாத பெருவிருந்தாகும். இறைவனின் நடனத் திற்கு ஏற்ப இருபுறமும உள்ள பூதகணங்களின் கைகளில் தாளமும் உடுக்கையும் அமைக்கப்பட் டுள்ளன. இறைவனின அளப்பற்ற பேராற்றல் மற்றும் அவனுக்கே உரிய நடனம் ஆகிய இருவேறு இயல்புகளும் இந்த வடிவில் ஒருங்கிணைந்து மிளிர் கின்றன. இது, கண்டு மகிழ வேண்டிய ஒரு வியத்தகு கலைப்படைப்பாகும்.

அடுத்து இங்கு காண வேண்டியது அன்னை திருவுருவம். இவளது இடுப்பில் இடப்புறமாகக் குழந்தை வடிவில் முருகன் தன் விரல்களால் தன் தந்தையை தன் அன்னைக்கு சுட்டிக்காட்டும்நிலை யில் அமைக்கப்பட்டுள்ளன. இறைவன் யானை யினை உரித்தது கண்டு இறைவி அஞ்சுவதாகத் திருவருட் செல்வர்கள் குறிப்பிடத் தவறவில்லை. உதாரணமாக,

> ''கொடுங்கரிக்குன்று உரித்து அஞ்சுவித்தாய்
> வஞ்சிக் கொம்பினையே''
> (நீத்தல் விண்ணப்பம்-19)

என்பர் மணிவாசகப் பெருந்தகையார். இதற்கு இலக்கியமாக இங்குள்ள வடிவம் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாம். மேலும் இங்குள்ள இறைவனின பிச்சாடன மூர்த்தி வடிவம், திருமாலின் மோகினி வடிவம் ஆகியவையும் கலைத் திண்மையுடன் எழிலுற அமைக்கப்பட்டுள்ளன.

இங்குள்ள சோழ, பாண்டிய, விசயநகர மன்னர்களின் கல்வெட்டுக்களினின்றும் மன்னர்கள் மட்டுமன்றி சாதாரண மக்களும் திருக்கோயில் திருப்பணிகளிலும், பூசைக்கு வேண்டியவற்றை அளிப்பதில் கொண்டிருந்த தெய்வீக உணர்வை அறிவதுடன, அக்காலப் பழக்க வழக்கங்களையும் அறியமுடிகிறது.

சமயமாண்பு, கலைச்சிறப்பு ஆகியவற்றுடன் இந்தக் கோயில் வரலாற்றுப் பெருமையும் உடைத் தாய் விளங்குகிறது.

# நூல் அறிமுகம்

# அன்னையின் பெயர்கள் ஆயிரம்

கி. ஏழிசைவல்லி, எம்.ஏ.

(லலிதா ஸகஸ்ரநாமம் மொழி பெயர்ப்பு)

கந்தர் சஷ்டி கவசம், அபிராமி அந்தாதி போன்ற தமிழ்த் தோத்திரங்களைப்போல் மக்கள் தங்கள் இன்னல்கள் தீரவும், இன்பங்கள் சேரவும் அன்றாடம் பாராயணம் செய்யும் வடமொழித் தோத்திரம் ''ஸ்ரீலலிதா சகஸ்ரநாமம்''. பிரும்மாண்ட புராணத்தில் இடம்பெற்றுள்ள இத்தோத்திரத்தை பரிமுகப் பெருமான் (அயக்ரீவர்) அகத்தியருக்கு உபதேசித்தார். தமிழ் முனிவர் கேட்ட அத்திருநாமங்கள் வடமொழியில் இருந்தன. அக்குறையை நீக்கி அவற்றை தமிழில் மொழிபெயர்த்துக் கொடுத்திருக்கிறார் டாக்டர் பருத்தியூர் கே.சந்தானராமன்.

எண்ணூற்று இருபத்தைந்து அடிகள் உள்ள அகவற் பாவாக ஆயிரம் நாமங்களையும் அழகிய தமிழில் மொழி பெயர்த்துள்ளார் ஆசிரியர். வட மொழி மூலம் தியான சுலோகத்துடன் தொடங்குகிறது. மொழி பெயர்ப்பு, தமிழ் மரபுப்படி கணபதி காப்பு வெண்பாவுடன் ஆரம்பிக்கிறது.

திருஞானசம்பந்தர் அழைத்த ''அம்மே'' என்ற தெய்வீகச் சொல்லுடன் ''அருள்திரு'' என அடைமொழி சேர்க்கப்பட்டு, ''அருள்திரு அம்மே! என்றே''ஸ்ரீமாதா'' என்ற நாமம் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. வடமொழி மந்திரச் சொற்கள் அப்படியே மாற்றம் பெறாமல் இருக்கின்றன. அத்துடன் தமிழ் வேதங்களின் மந்திரச் சொற்களும் ஆங்காங்கே இடம்பெற்றிருக்கின்றன. அதனால் இம் மொழி பெயர்ப்புத் தோத்திரம் இருமடங்கு மந்திரசக்தி வாய்ந்ததாகிவிட்டது என்றால் அது மிகையாகாது.

சிறிய நாமங்களை ஒன்று அல்லது இரண்டு வார்த்தைகளிலும், பெரிய நாமங்களை ஒன்று அல்லது இரண்டு அடிகளிலும் இடம்பெறச் செய்து தொடர்ச்சியாக பாராயணத்துக்கு வசதியாக்கிக் கொடுத்திருக்கிறார் ஆசிரியர். மரபு வழுவாத நல்ல தமிழ் நடையில் அமைந்திருக்கும் நூலில் ஆசிரியர் ஐம்பதுக்கும் மேற்பட்ட புதிய தமிழ்ச்சொல் வடிவங்களை உருவாக்கியுள்ளதும் குறிப்பிடத்தக்க தமிழ்ப் பணியாகும். பசு தன் கன்றிடம் காட்டும் அன்பு வடமொழியில் ''வாத்ஸ்ல்யம்''எனப்படும். ''வந்தாரு ஜன வத்ஸலா''என்ற நாமத்தை ''அடியார்க்கு ஆவின் அன்புடையாள்'' என்று மூலத்தின் பொருள் விளங்கும்படி ஆசிரியர் மொழி பெயர்த்திருக்கிறார்.

அர்க்யம், தர்ப்பணம் என்ற வடசொற்களை முறைய்ய புனலீடு, வார்ப்பீடு என்று தமிழாக்கம் செய்துள்ளார். காரணம் குறித்து அமைந்த வடசொல் பெயர்களை கூட ஆசிரியர் பல இடங்களில் அழகிய தமிழாக்கம் செய்துள்ளார்.''அச்வாரூடா'' என்பது ''பரிஊர்வாள்'' என்றும், ''ஸம்பத்கரி'' என்பது ''செல்வந்தருவாள்'' என்றும் தமிழாக்கம் பெற்றுள்ளன.

பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட விளங்கும் அன்னையின் பெயர்கள் ஆயிரத்தில் இலக்கியச் சுவையும் இல்லாமல் இல்லை.

''கலை மகள் மீட்டும் கச்சபி யாழினைத் தன் மொழி இனிமையால் தாழ்வுறச் செய்தவள்''.

''கொற்றவை ஆனவள்; உற்ற துயர் களைபவள்''

''மும்மலக் கடுந்தீ மூண்டு வாடினோர்
தம் மனம் குளிரவரு தண்மதி ஆனவள்''

''கடப்பமலர் உவப்பாள் கனிந்த சொல் உதிர்ப்பாள்''

''மழலையர் ஆயர் மற்றுள எவரும்
அறிந்திடற் குரிய எளிமையில் நின்றவள்''

''அழகினுக்கு அழகூட்டும் அழகியாம் அன்னையே''

இவை இலக்கிய நயம் கொஞ்சும் சில அடிகள் ஆகும். எழுத்தின் வடிவாக இருப்பவள் என்று பொருள்தரும் ''வர்ணரூபிணி'' என்ற நாமத்தை ''எந்தமிழ் முதலாம் எழுத்தனை வடிவினள்'' என்று மொழிபெயர்த்துள்ளமை, ஆசிரியரின் தமிழ்ப் பற்றைக் காட்டுவதாக அமைகிறது.

பின்னிணைப்புப் பகுதியில் பரிமுகப்பெருமான் பற்றிய குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், புதிய தமிழாக்கம், பழந்தமிழ்ச் சொல்லாட்சி ஆகியவற்றுடன் நூற்றெட்டுப் போற்றியும் இடம்பெற்றுள்ளன. ஆயிரம் திருப்பெயர்களில் 108 பெயர்களைத் தெரிந்தெடுத்து அகர வரிசையில் தொகுத்துக் கொடுத்துள்ளார். ஆசிரியர் அதன் முடிவில்

''வாச மலரிட்டு வந்தித்தேன் அன்னையே!
நேசமுடன் காப்பாய் நிதம்''

என்ற அழகிய குறள் வெண்பா தமிழ்ப்போற்றி வழிபாட்டை நிறைவு செய்கிறது.

தமிழ்ச் சமுதாயத்தில் அடித்தளத்தில் இருக்கும் ஏழை எளிய பாமர மக்களில் ஏராளமானோர் அம்பிகையை வழிபடுகின்றனர். அவர்களுக்கு ஏற்ற நல்ல தமிழ்த் தோத்திர மொழி பெயர்ப்பை வழங்கியுள்ள ஆசிரியரின் பணி ஒரு குறிப்பிடத்தக்க சமுதாயப்பணி ஆகும்.

அன்னையின் பெயர்கள் ஆயிரம் ஒரு நல்ல மொழி பெயர்ப்புத் தமிழ் இலக்கியம். தமிழ் வழி வழிபாட்டிற்கும், அர்ச்சனைக்கும் ஏற்ற படைப்பு. அர்ச்சகர், புரோகிதர், அம்பிகை அடியார்களுக்கு மிகவும் பயனுள்ள நூல்.

நூலின் விலைரூ.7-. மணி ஆர்டர் அனுப்பிப் பெறலாம். அஞ்சல் செலவு இலவசம். நூல் வேண்டுவோர் நாட வேண்டிய முகவரி.

டாக்டர் கே. சந்தானராமன்,
3, ஆடம்தெரு, மயிலாப்பூர்,
சென்னை-600 004.

# சித்திர பாரதம்

கதை செவ்வேள்

படம் MN ராஜா

சுபத்திரையுடன் இந்திரப்பிரத்தம் திரும்பும் அர்ச்சுனனைப் பெருமகிழ்வோடு வந்து வரவேற்கிறார் தருமர். கண்ணனால் சமாதானம் ஆகிவிடும் பலராமரும் தம் தங்கை சுபத்திரைக்கு வேண்டிய சீர்வரிசைகளோடு இந்திரப்பிரத்தம் வந்து அளவளாவுகிறார்



சுபத்திரை அபிமன்யுவை மகனாகப் பெறுகிறாள். பாஞ்சாலி உபபாண்டவர்களான பிரதிவிந்தன், சுதசோமன், சுருதகர்மா, சதாநீகன், சுருதசேணன் ஆகியோரை ஆண்டிற்கொருவராகப் பெறுகிறாள்.





பாண்டவ குமாரர்கள் அஸ்திரவித்தைகளை ஆர்வமுடன் கற்கின்றனர். அபிமன்யு அர்ச்சுனன் போலவே வில்வாற்றலில் மேம்படுகிறான்.





கிருஷ்ணார்ச்சுனர்கள் ஓர் அழகிய சோலையில் ஒருங்கு வீற்றிருக்க முனிவர் ஒருவர் அங்கு வருகிறார்.




யான் அக்கினி. எனக்கு உணவாக வேண்டியது காண்டவவனம். இந்திரனுக்கு உரிய அவ்வனத்தை நான் உண்ண நீங்கள் உதவவேண்டும்



"சுவேதகி மன்னன் பன்னி-
ரண்டு ஆண்டுக்காலம் வேள்வி
புரிய, அளவற்ற நெய்யை
உண்டு நோயைக் கொண்டேன்
காண்டவவனம் உண்டால்
நோய் தீரும் என்றார் பிரம்மா"



இந்திரனோ நான் காண்-
டவவனம் உண்ணும் போ-
தெல்லாம் கரும் மழை பொ-
-ழிந்து தடுத்து விடுகிறான்"



கவலைப்ப வேண்டாம். இனி
காண்டவவனத்தை நீ உண்-
ணத் தடையிராது. அர்ச்சுன-
-னுக்கு உன் காண்டீபத்-
தைக் கொடு



அர்ச்சுனனுக்குத் தன் காண்டீபத்தையும், அம்புகள்
குறையா இரு அம்பறாத்தூணிகளையும், நான்கு
வெள்ளைக் குதிரைகள் பூட்டிய தன் தேரையும்
வழங்குகிறான் அக்கினி.



ஊழித்தீ போல் உக்கிரம்
கொண்டெழும் அக்கினி, காண்-
டவவனத்தை உண்ணுகிறான்
தப்ப முற்படும் சிங்கம், யானை
முதலான விலங்குகளையும், அரக்கர்களையும் காண்டீபத்தால்
கொன்று அக்கினிக்கு இரையாக்குகிறான் அர்ச்சுனன்.



வனம் எரியக்கண்டு விரைந்து வரும்
இந்திரன் மேகங்களை ஏவித் தீயை
அணைக்க முற்படுகிறான். இடி மின்னலோடு
பெருமழை பொழிகிறது. அம்புகளால் அருச்-
-சுனன் சரக்கூடம் கட்டிவிட, பெய் மழையால்
பெருந்தீயை நெருங்கவும் முடியவில்லை.



தட்சகன் எனும் நாகத்தின் மனைவி,
தன் சேய் அசுவசேனனை வாயில்
கௌவிக் கொண்டு, வானில் பறந்து தப்ப
முயல்வதை அர்ச்சுனன் காண்கிறான்.





இறைவனுடைய அருளால் இவ்வுலகில் பிறவி எடுக்கின்றோம். இது நம்முடைய வினைக்கேற்ப நடக்கின்றது. ''வினைக்கு ஈடாய் மெய்கண்டு'' என்பார் திருமூலர். ஆனால், நாம் இவ்வுலகில் பிறந்ததன் நோக்கம் இறைவனுடைய பேரருளைப் பெற்று அவனுடைய திருவடிகளைச் சேருவதேயா கும். அவரவர் வினைக்கேற்ப இந்த முயற்சி ஒரு பிறவியில் முடியலாம் அல்லது பல பிறவிகள் தேவைப்படலாம். ஆனால் நம்முடைய குறிக் கோள் தெளிவாக இருக்க வேண்டும். ''வில்லி இலக்கு எய்த விற்குறிபோல்'' என்பது திருமந் திரம். நமது நோக்கம் நிறைவேற இந்தப் பிறவி யைப் பயன்படுத்தவேண்டும். இது முள்ளை முள் ளாலே எடுப்பது போலாகும். ஆனால், நம்முடைய வினைகளின் காரணமாக அவ்வாறு செய்யாமல் மீண்டும் மீண்டும் தொடர்ந்து வரும் முயற்சிகளிலே ஈடுபட்டிருக்கின்றோம். ஆனால், அடியார்கள் இறைவனுடைய திருவடிகளை சதா மனத்தால் நினைத்தும் வாயினால் புகழ்ந்தும், உடம்பினால் வணங்கியும், தங்கள் உடல், பொருள் ஆவி மூன்றையும் இறைவனுக்கு அர்ப்பணித்து அவனுடைய திருத்தாள் சேர்ந்தவர்கள். காரைக் கால் அம்மையார் அத்தகையவர். ''இறைவனு டைய திருத்தாளினை அடைந்தோம். நமக்கு இனி ஒரு துன்பமும் இல்லை. கர்மங்களுக்கு வலிமை யைச் சேர்க்கும் பிறவிக் கடலை நீந்திவிட்டோம்'' என்று தன் நெஞ்சிடம் சொல்லிக்கொள்கின்றார்.

''இனியாநாம் உய்ந்தோம்;

இறைவன்தாள் சேர்ந்தோம்;

இனிஓர் இடர்இலோம்; நெஞ்சே!- இனி ஓர்

வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாக்

கனைக்கடலை நீந்தினோம் காண்''

(அற்புதத்திருவந்தாதி)

திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகருக்கு இறைவன் ஞானகுரு வடிவில் வந்து சிவஞான உப தேசம் செய்கின்றான். சிவதரிசனம் கிடைக்கப் பெற்றார் மணிவாசகப் பெருமான். இறைவனு டைய பேரருள் அவருக்குக் கிட்டியது. சித்தமலம் நீங்கி சிவமாம் தன்மை பெற்றார். பேரறிவான ஜோதியை தமது சிந்தையிலே உணர்ந்தார். தெய் வம் என்பதோர் சித்தம் அவருடைய உள்ளம் புகுந் தது. இறைவன் அவருக்காக பல அற்புதங்களை நிகழ்த்தினான். எல்லாவற்றிற்கும் மேலாக ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் திருப் பாடல்களை பாடும் ஓர் அருமையான ஆற்றலை சிவபெருமான் அவருக்கு அருளித் தந்தான். இத் தகைய பேறு பெற்ற மணிவாசகப் பெருமான் எதற்கு அஞ்ச வேண்டும்? இறப்புக்கா? பிறப் புக்கா? வேட்கை இருந்தால்தானே இறப்பும் பிறப் பும்? மணிவாசகப்பெருமானா இம்மையிலும் மறு மையிலும், வானிலும் மண்ணிலும் கிடைக்கும் நிலையற்ற இன்பங்கள் மீது தனது நாட்டத்தைச் செலுத்தப் போகின்றார்? ''தான் வரைவு அற்ற பின் யாரை வரைவது? தான் அவன் ஆனபின் யாரை நினைவது? காமனை வென்ற கண்கள் யாரை உகப்பது?''

ஆனாலும் அத்தகையப் பெரியார் வேண்டுவது ஒன்றே. சிவபெருமானின் அருளில் மூழ்கித் திளைத் தவர் மீண்டும் மீண்டும் அந்த அருள் என்று வரும் என்று வருந்துவார்.

**''திருமந்திரச் செம்மல்'' திருமிகு டி. வி. வெங்கட்ராமன் ஐ.ஏ.எஸ்., அவர்கள் ''திருக் கோயில்'' இதழ் வாசகர்களுக்காகத் ''திரு மந்திரச் செம்பொருள்'' கட்டுரைகளைத் தொடர்ந்து வழங்க விருப்பம் தெரிவித்துள்ளார்கள். அன்பர்கள் படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.**

''யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்; இறப்பு-அதனுக்கு என் கடவேன்?
வானேயும் பெறில் வேண்டேன்; மண் ஆள்வான் மதித்தும் இரேன்;
தேன் ஏயும் மலர்க் கொன்றைச் சிவனே! எம்பெரு மான்! எம்
மானே! 'உன் அருள்பெறும்நாள் என்று என்றே வருந்துவனே.''

(திருவாசகம்- திருச்சதகம்)

திருமூலர் ஓர் தவராஜ யோகியார். மூவாயி ரம் ஆண்டுகள் யோகத்தில் அமர்ந்து மூவாயிரம் திருமந்திரங்களை உலகிற்கு அருளிச் செய்தார் என்பது தெய்வச் சேக்கிழார் நமக்குத்தந்த செய்தி யாகும். பிறப்பிற்கும் இறப்பிற்கும் காரணமான வற்றை வென்றவர். எனவே, ''இருந்தேன் இக் காயத்தே எண்ணிலி கோடி; இருந்தேன் இராப் பகல் அற்ற இடத்தே'' என்று அருளிச்செய்கிறார். பரம்பொருளாகிய சிவபெருமானைக் கண்டார். பேரருள் பெற்றார். அதனால் பிறப்பு நீங்கப் பெற் றார். பாசங்கள் அவரை அகன்று நின்றன. சீவ கரணங்கள் சிவகரணங்களாகி கடவுளுடன் ஒன்றி நின்றார். ''மீண்டும் இப்பிறப்பை வேண்டேன்'' என்றும் சொல்லுவார்.

''ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்

கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்

அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்

செழுஞ்சார் புடைய சிவனைக்கண்டேனே''

(திருமந்திரம்-2958)

தவத்தால், யோகத்தால், என்றும் மாறாத அன்பினால் கிடைக்கப்பெறும் பேரறிவு அனுபவம் ஞானியர்களின் உள்ளத்திற்குத்தளராத உறுதியைத் தருகின்றது. அந்த உறுதி பிறவிக்கட லைத் தாண்டத் தோணி போன்று உதவுகிறது. பழைய வினைகள் அகலுகின்றன. வெளியில் வெளி போய் அடங்குகின்றது. அச்சம் நீங்குகிறது. ஞான வாளுக்கு நிகராக வேறு எந்த ஆயுதமும் இல் லையே!

''நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்

சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்

பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்.

தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராரே''.

(திருமந்திரம்..2968)



# கம்பரின் இராமாவதாரம்



டாக்டர் த. அமிர்தலிங்கம்

[21]

கொன்றை மலர்கள் பொன்னிற மலர்களைச் சொரியும் அடர்ந்த கானகத்தில் இராமரும் சீதையும் மிகுந்த மகிழ்ச்சியுடன் நடந்து செல்கிறார்கள். சூரியனின் வெம்மையான கிரணங்கள் நெருங்கியுள்ள மரங்களால் தடுக்கப்படுவதால், முழுநிலா வெளிச்சத்தில் நடப்பதை போலவே அவர்கள் உணர்கிறார்கள். இளவண்டுகள் இனிமையாகப் பாட, அணிமயில்கள் அழகுற ஆட, அத்தகு கண்ணுக்கினிய காட்சிகளைக் கண்டவாறே அவர்கள் தம் பயணத்தைத் தொடர்கிறார்கள்.

அயல்மனிதர்களைக் கண்டால் அஞ்சி ஓடுவதன்றோ காட்டுவிலங்குகளின் இயற்கைக் குணம்! அவ்வாறில்லாமல் இராமரும் சீதையும் ஒருங்கு வரக்காணும் மயிற்கூட்டமும், மான்கூட்டமும் அவர்களை இன்முகம் காட்டி வரவேற்பதுபோல் நெருங்கிவந்து நகைமுகம் காட்டுகின்றன. அக்காட்சியில் மனம் களித்து நிற்கும் சீதையின் மனம் மேலும் பூரிக்க இராமர் இவ்வாறு அவளைப் பாராட்டிக் கூறுகிறார். ''வேல்போன்ற விழி கொண்ட சீதையே! மயில்கள் உன்னிடம் தங்கள் சாயல் இருப்பதால், உன்னையும் ஒரு மயிலாகவே எண்ணிப் பின்தொடர்ந்து வருகின்றன பார்! இம மான்கள் உன் விழிகளைக் கண்டு உன்னையும் தம் இனமான மான் எனவே மயங்கிப் பின் தொடர்நது வருவதைப் பார்''.

''குயில் போன்ற இன்னிசைக் குரல் கொண்ட சீதையே! உன் பூப்போன்ற பாதங்கள் இக்காட்டு வழியில் பரவிக் கிடக்கும் பரலைக் கற்களால் வருந்தக்கூடாது என்பதற்காகவே வழியெங்கும் மலர் பரப்பி வைத்துள்ள இம்மரங்களைப் பார்! நறுமண மலர்களைத் தாங்கி நிற்கும் இப்பூங்கொடிகள் ஏன் இவ்வாறு துவண்டு நிற்கின்றன தெரியுமா? உன் கொடி இடைக்கு நாணியே அவை இவ்வாறு துவண்டு நிற்கின்றன.''

''தீட்டுவதற்கு இயலாத பேரெழில் வடிவமான சீதையே! காந்தள் மலரின் மொட்டினைப் பாம்பு என்று மயங்கி ஒரு களிமயல் ஓடிப்போய் கௌவுகிற காட்சியையும் அதோ நீ அங்கே பார்! அம்மயிலின் செய்கையைக் கண்டு பரிகாசம் செய்வது போல் அருகிலிருக்கும் முல்லை மலர்ந்து சிரிபபதையும் நீ காண்''

வித்தக ஓவியர் புனையும் கைவினைச் சித்திரம் போலவே எழிலுறத் திகழும் கானகத்தின் இணையற்ற இயற்கைக் காட்சிகளைச் சீதைக்குக் காட்டிக் களிப்பூட்டுகிறார் இராமபிரான். இதே கானகத்தில் வாழும் இடையர்தம் வீடுகளில் பசுவின் கன்றுகளோடு புலிக்குட்டிகளும் யானைக் குட்டிகளும் கூட தம்முள் வேற்றுமையின்றிக் கலந்துறவாடி விளையாடும் கவின்மிகு காட்சியையும் இராமர் சீதைக்குக் காட்டுகிறார்.

''குன்றுறை வயமாவின் குருளையும் இருள்சிந்திப்
பின்றின தெனலாகும் பிடிதரு சிறுமாவும்
அன்றில பிரிவொல்லா அண்டர்தம் மனைஆவின்
கன்றொடு விளையாடும் களியன பல காணாய்''

இராமரும் சீதையும் இத்தகைய களிப்பூட்டும் இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தவாறே சூரியன் அத்தமிக்கும் மாலைப் பொழுதினில் திரிவேணி சங்கமமான பிரயாகையை வந்து அடைகிறார்கள். முனிவர்களில் சிறந்த மாமுனிவரும், பிறவிநோயைப் போக்கும் மருத்துவருமான பரத்துவாசர் இராமர் தம்மாசிரமம் வருவதை உணர்ந்து மகிழ்ந்து இராமரை எதிர்கொண்டு வரவேற்கிறார். நான்கு வேதங்களும் நர்த்தனம் செய்கிற நா உடையவரான பரத்துவாசர், நாடோறும் முத்தழல் வளர்த்து இறையோம்பும் வேள்விச் செல்வமே செல்வமாகப் போற்றுபவர். தம் தவத்தின் வலிமையால் பிரம்மாவைப் போல் ஏழுலகங்களைப் படைக்கவும், திருமாலே போல் அனைத்துயிர்களைக் காக்கவும் ஆற்றல் பெற்றிருக்கும் அம்முனிவர், இராமரை தரிசிக்கும் ஆர்வத்தோடு வந்து இராமரை எதிர்கொண்டு வரவேற்கிறார்.

''அருத்தியில் அகம்விம்மும் அன்பினன் நெடுநாளில்
திருத்தின தவமுற்றிற்று இன்றென தெரிகின்றான்
பரத்துவன் எனும் நாமப் பரமுனி பவநோயின்
மருத்துவன் அனையானை வரவெதிர் கொள
வந்தான்''

தம்மை எதிர்கொள்ளும் பரத்துவாச முனிவரை இராமபிரானும் மும்முறை வலம் வந்து வணங்கி மலர்தூவிப் பூசிக்கிறார். இருவரும் ஒருவரை ஒருவர் அன்பின் மிகுதியால் கட்டி அணைத்துக் கொள்கிறார்கள். 'முதுமைக் காலத்தில் ஈன்ற

புதல்வரிடம் அரசபாரத்தை ஒப்புவித்துப் பின் தவக்கோலம் பூண்டு தவம் செய்ய, எம்போன்ற முனிவர் ஆசிரமங்களை நாடி வருவதல்லவா இட்சுவாகுகுல மன்னர்களுக்கு வழக்கம். நீ இளமையிலேயே தவக்கோலம் பூண்டுவர என்ன காரணம்?'' என்று இராமரை வினவுகிறார் பரத்துவாசர். இராமரும் அயோத்தியில் நிகழ்ந்த சம்பவங்களை முனிவருக்கு எடுத்துரைக்கிறார். அது கேட்கும் பரத்துவாசரும் ''பட்டத்திற்குரிய மூத்தவனைக் காட்டுக்கு விரட்டுவது, இளையவன் முடி சூட்டிக் கொள்வது இவையெல்லாம் கலிகாலத்துக்குரிய செய்கைகள் அல்லவா! தருமயுகமான இத்திரேதா யுகத்தில் இச்செயல்கள் நடைபெறுமாயின் இது ஊழ்வினையின் குற்றமேயாகும். மண்மகளும் உனை மன்னனாகப் பெறச் செய்த தவத்தைப் பூர்த்தியாகச் செய்திலள் போலும்'' என்று கூறி வருந்துகிறார்.

''உற்றுள பொருள் எல்லாம் உணர்வுற உரை
செய்தான்
நற்றவ முனி அந்தோ விதிதரு நவை என்பான்
இற்றது செயலுண்டோ இனி என இடர்கொண்
டான்
பெற்றுலள் தவம் அந்தோ பெருநில மகள் என்றான்''

'என் ஆருயிர் நண்பர் தசரதர் உன்னைக் காட்டிற்கு அனுப்பி எப்படித்தம் உயிரைத் தாங்கினாரோ?'' என்பதாகத் தம் அச்சத்தைத் தெரிவிக்கும் பரத்துவாசர் அதுபற்றி விரிவாகப் பேசுதல் அழகன்று என்று அத்துடன் தம் உரையை நிறுத்திக் கொண்டுவிடுகிறார். தம்மாசிரமத்திற்கு இராமரையும் சீதையையும் அழைத்துச் சென்று தம் பிரிய மக்களை விருந்து முதலியவற்றால் உபசரிக்கும் தந்தையே போலப் பரிவுடன் உபசரிக்கிறார்.

குகனைப் போலவே பரத்துவாசரும் இராமரைத் தம்மாசிரமத்திலேயே தங்கிக் கொள்ளுமாறு வேண்டுகிறார். ''கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்று புண்ணிய நதிகளும் ஒன்றுசேரும் சங்கமத் துறை ஆதலின் இவ்விடம் பிரமதேவனும் மகிழ்ந்துறையத்தக்க புண்ணிய இடமாகும். தவம் செய்ய அமைதியான சூழலும், வேண்டிய நீர், மலர், காயகனி கிழங்குகளும் ஏராளமாக உள்ளன. இங்குத் தங்குவோரின் தீவினை அறவே நீங்கும். புண்ணியம் பெருகும். இப்பிரயாகையிலேயே நீங்களும் தங்கிக் கொள்ளலாம்''.

''நிறையும் நீர் மலர் நெடுங்கனி கிழங்கு காய்
நேர்ந்த
குறையும் தீயவை, தூயவை குறைவில, எம்மொடு
உறையும் இவ்வழி, ஒருங்கினில் உயர்தவம்
முயல்வார்க்கு
இறையும் ஈதலாது இனியதோர் இடமரிது
இன்னும்''

''கங்கையாளொடு கரியவள் நாமகள் கலந்த
சங்கம மாதலிற் பிரியலன் தாமரை வடித்த
அங்கண் நாயகன் அயனுக்கும் அரும்பெறல்
தீர்த்தம்
எங்கள் போலியர் தரத்ததன்று இருக்திர் ஈண்
டென்றான்''

பரத்துவாசரின் அன்பான விருப்பத்தையும் கூட இராமர் மறுத்து விடுகிறார். ''நிறைபுனல் கோசல நாட்டுக்கு அருகில் இல்லையாயினும், மிகத் தூரமாகவும் இவ்விடம் இல்லை. ஆகவே கோசலநாட்டு மக்கள் எங்களைத் தேடி அடிக்கடி இங்கு வரக்கூடும். அதனால் தங்களைப் போன்ற தவசிகள் தவமும் பங்கப்பட நேரும். ஆகவே இங்கு யான் தங்கிட விரும்பவில்லை.'' இராமருடைய இக்கருத்தும் பரத்துவாசருக்கு ஏற்புடையதாகவே படுகிறது. ''அப்படியானால் இங்கிருந்து பத்து காத தூரத்தில் சித்திரகூடமலை சொர்க்கமே போல் சிறப்புற்று விளங்குகிறது. அங்கு நீங்கள் சென்று தங்கிக் கொள்ளலாம்.''







என்று பரத்துவாசர் அறிவுறுத்த இராமரும் அன்றிரவு முனிவரின் ஆசிரமத்தில் தங்கியிருந்து, அடுத்த நாள் அதிகாலையில் சித்திரகூட மலையை நோக்கிப் புறப்படுகிறார்.

இராமர், சீதை, இலக்குவன் மூவரும் கதிரவன் உச்சி வானில் விளங்கும் நடுப்பகல் வேளையில் யமுனை நதிக்கு வருகிறார்கள்; வழிநடை வருத்தம் தீர யமுனையில் நீராடி மகிழ்கிறார்கள். இலக்குவன் சிறந்த கனிகளையும் காய்களையும் கொண்டு வர அவற்றை உண்டு பசியாறுகிறார்கள். மூங்கில் கழிகளை அளவுபட வெட்டி, அவற்றைக் காட்டுக் கொடிகளைக் கொண்டு கட்டித் தெப்பத்தை அமைக்கிறான் இலக்குவன். இராமரும், சீதையும் ஓடத்தில் அமர்ந்து கொள்ள, இலக்குவன் நீரில் நீந்தியவாறே தன்னிரு கரங்களாலும் ஓடத்தைத் தள்ளிச் செலுத்துகிறான்.

''வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாணையின் கொடியால்
ஓங்குத் தெப்பமொன்றமைத்து அதின் உம்பரில் உலம்போல்
வீங்கு தோள் அண்ணல் தேவியோடு இனிது வீற்றிருப்ப
நீங்கினான் அந்த நெடுநதி இருகையான் நீந்தி''

நீண்ட யமுனை நதியைக் கடந்து அதன் மறுகரைக்கு மூவரும் வருகிறார்கள். நெருப்பென வெப்பம் சுடும் கொடிய பாலைவனம் ஒன்று அப்பொழுது எதிர்ப்படுகிறது. ''சீதை எவ்வாறு இப்பாலையின் வெம்மையைத் தாங்கிடுவாள்?'' என்று இராமர் எண்ணுகிறார். அவ்வாறு அவர் எண்ணிய அளவிலேயே ஒரு அற்புதம் நடக்கிறது. கதிரவன் தன் வெம்மை மாறி முழுநிலவேபோல் குளிர்கிறான். வற்றி வதங்கிய மரங்களும் உடன் பசுமை பூண்டு தழைக்கின்றன. நெருப்பாகச் சுட்ட அப்பாலை வனம் முழுதும் தாமரைக் காடுகளாக மாறி விடுகின்றன. காலமின்றியும் கனிவர்க்கங்கள் பழுத்துக் குலுங்குகின்றன. வேர்கள் இன்றியும் கிழங்குகள் தோன்றுகின்றன. எங்கணும் பூங்கொடிகள தழைத்துப் பூவையரேபோல் சிரிக்கின்றன.

''கால மின்றியும் கனிந்தன கனிநெடுங் கந்தம்
மூல மின்றியும் முகிழ்த்தன நிலனுற முழுதும்
கோல மங்கையர் ஒத்தன கொம்பர்கள் இன்பச்
சீல மன்றியும் செய்தவம் வேறுமொன் றுளதோ?''

தவசியர் தம் தவ வலிமையால் ஆற்றவல்ல அற்புதங்களை ஒழுக்க சீலர்கள் தம் நல்லொழுக்கத்தால் ஆற்றிட இயலும்; இராமர், சீதை, இலக்குவன் ஆகியோர்தம் நல்லொழுக்க சீலம் ஆற்றிய அற்புதமே இது என்று காட்டுகிறார் கவிச்சக்கரவர்த்தி கம்பர்.

சீலமிக்க தவசிகள் விரும்பி உறையும் உறைவிடமான சித்திரகூட மலையை விரைவிலேயே மூவரும் சென்று சேர்ந்துவிடுகிறார்கள். அம்மலையிலும் கண்டோர் வியக்கத்தக்க அதிசயங்கள் பல நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. சித்திரகூட மலையில் வாழும் யானைக் கன்றுகள் தத்தம் தும்பிக்கையில் அருவி நீரை முகந்து கொந்ண்டு வந்து முதியவர்களான தவசியர்கள் கமண்டலத்தில் நீரைச் சொரிந்து உதவுகின்றன. கடுவன் குரங்குகள் கண் பார்வை மங்கிய தவசியர்களின் கையைப் பிடித்து வழிகாட்டி அவர்களை அவரவர் ஆசிரமங்களுக்கு அழைத்துச் செல்லுகின்றன. மறையவர்கள் பூணும் யக்ஞோப வீதத்திற்கு வேண்டிய பஞ்சு நூலினை மந்திகள் தேடிக் கொண்டு வந்து கொடுக்கின்றன; அவர்களின் யாகக் குண்டங்கள் கொழுந்துவிட்டு எரியுமாறு மயில்கள் தம் சிறகை விரித்து விசிறிபோல் வீசுகின்றன. மாங்கனிகள், பலவின் கனி, வாழைக்கனி ஆகிய முக்கனிகளையும் கொண்டு வந்து முனிவர்களுக்கு ஆண் குரங்குகள் பரிவுடனே வழங்க, வள்ளக்கிழங்கு முதலான கிழங்குகளைத் தோண்டி எடுத்து வந்து பன்றிகளும் தவசிகளுக்குத் தருகின்றன. பெரிய யானைகளையும் விழுங்கவல்ல மிகப் பெரிய மலைபாம்புகள் தவசிகள் தம்மீது கால் வைத்து ஏறிச் செல்ல படிகள் போல உதவுவதையும் இம்மலையில் கண்டு வியக்கிறோம். பரத்துவாச முனிவர் அறிவுறுத்தியதே போல் சொர்க்கத்திலும் சிறந்த மலையே சித்திர கூடமலை; இம்மலைக்கு இராமர் வருவதும், தவசிகள் எல்லோரும் கன்றினைக் கண்ட தாய்பசு போல விரைந்து வந்து எதிர்கொண்டு வரவேற்று உபசரித்து மகிழ்கிறார்கள்.

இராமரும் சீதையும் வதிந்திட ஒரு அழகிய பர்ணசாலை அமைக்கும் பணியில் ஆர்வமுடன் ஈடுபடுகிறான் இலக்குவன். நீண்ட மூங்கில்களை வெட்டிக் கொணர்ந்து அவற்றை வேண்டிய உயரத்திற்கு அளவாக மீளவும் வெட்டி அவற்றைப் போதிய இடைவெளி விட்டு மண்ணில் உறுதிபட நட்டுக் கொள்கிறான். அவற்றின் மேல் ஒடுங்குதல் இல்லாத நீண்ட தூலத்தை உத்திரமாக அமைக்கிறான். அவ்வுத்தரத்தின் மேல் தேக்கிலையைக் கொண்டு அமைத்த மேற்கூரையை முதலிலும், நாணற் புல்லால் அமைத்த கூரையை அடுத்தும் நன்கு பொருந்த வேய்கிறான். மண்ணைப்பிசைந்து சுவர்களையும் சீராக அமைக்கிறான். மணியாசுக் கட்டையால் தேய்த்துச் சுவர்களை நன்கு சமன் படுத்துகிறான. தன் கைத் தொழில் திறமையால் மனையடி சாஸ்திரத்தில் கூறியிருக்கும் ஒழுங்கு முறையின்படியே பர்ணசாலையைச் சிறப்புற நிர்மாணத்துவிடும இலக்குவன குங்குமச்சேறு கொண்டும் அழகு பொருந்தப் பூசிமெழுகுகிறார். முனிவர் முதலியோர் இராமரைக் காண வரும்போது சீதைக்குத் தனி இடம தேவைப்படும் என்பதால் தனித்தனி இரு அறைகளுடன் அப்பர்ண சாலையை நேர்த்தியுற அமைத்து விடுகிறான் இலக்குவன்.

ஞானியர் தம் தூயஉள்ளம், நான்மறை, திருப்பாற்கடல், வைகுந்தம் ஆகியவற்றோடு ஒப்பிடததக்க சிறப்புமிக்கது இலக்குவன் அமைத்த பர்ணசாலை எனறு வர்ணிக்கிறார் கவிச்சக்கரவர்த்தி கமபர்.

''மாய நீங்கிய சிந்தனை, மாமறை
தூய பாற்கடல், வைகுந்தம் சொல்லலாம்
ஆய சாலை அரும்பெறல் அன்பினான்
நேய நெஞ்சின் விரும்பி நிரம்பினான்''

தம்பி இலககுவன் அமைத்த பர்ண சாலையைப் பாற்கடலாகவும் வைகுந்தமாகவும் பாவித்து பேரன்பு பூண்ட பரம்பொருளாகிய இராமர் தம் மனையாளான திருமகளோடு அதில் எழுந்தருளி வீற்றிருக்கின்றார். தம்பி இலக்குவன் தம் பொருட்டு எத்தகைய இன்னல்களுக்கு எல்லாம் ஆளாக வேண்டியிருக்கிறது என்று இவ்வேளையில் வருந்தவும் செய்கிறார் ஸ்ரீராமர். ''தந்தையின் கட்டளை ஏற்றுச் சூரியகுலப் பெருமையும் தருமமும் காக்க நான் கானகம் வந்து உனக்கல்லவா பல கஷ்டங்களைத் தந்து கொண்டிருக்கிறேன்'' என்று இராமர் தம் வருத்தத்தை இலக்குவனிடமும் தெரிவிக்கிறார். இலக்குவனும் அண்ணலைத் தேற்றுபவனாய் ''எந்தையே! எப்போது நம் மன்னவர், கைகேயிக்கு வரம் தந்தாரோ அப்போதே உங்கள் துயர்களுக்கான முளையும் தோன்றிவிட்டது. உத்தமராகிய உமக்கு இத்

துயரங்கள் நேர்ந்தனவே என்பதுதான் எனக்கு வருத்தமே தவிர, உமக்குப் பணி செய்வது எனக்கொன்றும் துயரம் இல்லை. அவை எனக்கு இன்பம்தான்'' என்று கூறுகிறான்.

தந்தையின் செயலை இலக்குவன் இங்ஙனம பழித்துக் கூறப் பரந்தாமன் ஆன ஸ்ரீராமர் அவனுக்கு அறிவுரை கூறுகிறார். ''அரச சுகம் என்பது நிலையற்றது. பகைவர்கள் எப்போது வேண்டுமானாலும் கவரக் கூடியது. அரசபோகம் பேரின்பமும் ஆகாது. நாம் வனத்தில் வாழும் இந்தத் தவ வாழ்வே எல்லையில்லாத பேரின்பத்தை நல்கக் கூடியது. ஆகவே இவ்வன வாசத்தைப் பழித்துக் கூறாதே'' என்றும் இலக்குவனுக்கு அறிவுரை பகர்கின்றார் இராமபிரான்.

இங்கே சித்திரகூட மலையில் இராமரும், சீதையும், தவவாழ்க்கையை மகிழ்வுடன் ஆற்றியிருக்க அங்கே வசிட்டர் அனுப்பிய தூதர்கள், இரவு பகலாகத் தம் பயணத்தைத் தொடர்ந்து கேகய நாட்டிலிருக்கும் பரதனின் மாளிகையைப் போய் அடைகிறார்கள். அயோத்தியிலிருந்து தூதுவர்கள் வந்திருப்பதை அறிந்து பரதனும் அவர்களைத் தன்னிடத்திற்கு வரவழைத்து ஆர்வமுடன் ''சக்கரவர்த்தி சுகம் தானே'' என்று வினவுகிறான். வசிட்டரின் உத்திரவிற்கிணங்க அயோத்தியில் நிகழ்ந்ததொன்றையும் உரைக்காமல் அத்தூதுவர்களும் சக்கரவர்த்தி சுகமாக இருப்பதாகத் தெரிவிக்கிறார்கள். ''சக்கரவர்த்தி அனுப்பியிருக்கும் திருமுகம் இது'' என்று தூதுவர்கள் கொடுக்க அதனைப் பக்தியோடு வாங்கித் தன் தலைமீது வைத்து வணங்குகிறான் பரதன். ''அவசரம். இத்திருமுகம் கண்டவுடனே புறப்படவும்'' என்று கண்டிருக்கும் வாசகத்தைப் படித்தும் பரதனுக்கு எவ்வித ஐயமும் உண்டாகவில்லை. இராமரைத் தரிசிக்கும் ஆசையில் அயோத்திக்குப் புறப்பட எப்பொழுதும் சித்தமாகவே இருக்கும் பரதன் ''உடனே புறப்படவும்'' என்ற திருமுகச் செய்தியை அறிந்து பேரானந்தமே அடைகிறான். திருமுகம் கொண்டு வந்த தூதுவர்களுக்கு அளவற்ற நிதியை வாரி வழங்கி, உடனே அயோத்திக்கு புறப்பட்டு விடுகிறான் பரதன். கேகய மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு தம்பி சத்ருக்கனனோடும், அளவற்ற தன் சேனைகளோடும் அப்பொழுதே காலநேரம் ஒன்றும் பாராமல் அயோத்திக்குப் புறப்பட்டு விடுகிறான் பரதன்.

(தொடரும்.)

# நூல் மதிப்புரை!

நூல் பெயர்: **திருத்தில்லைப் பாவை**

நூலாசிரியர்: கவிஞர் எஸ். ஜோதி பி.ஏ.

வெளியீடு: அருள்மிகு வேதகிரீஸ்வரர் திருக்கோயில் திருக்கழுக்குன்றம்-603 109.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள திருப்பனந்தாள் பேராசிரியர் மு சுந்தரேசனார் இந்நூலைப் பாராட்டியுள்ள கருத்துக்கள் பின்வருமாறு ''எம்பாவாய்'' என்று முடியும தீந்தமிழ்ப் பாடல்களை யுடைய இந்நூல் தேனினும் இனியது. சீரிய கூரிய தீஞ்சொற்களை உடையது பொருள்வளத்துடன் இன்னோசை மிக்கது. தெய்வத் தமிழ் நூல்களைப பின்பற்றியமைந்த சைவச் செந்தமிழ் நூல்''

இவ்வினிய நூலிலிருந்து சான்றிற்கு ஒரு பாடல்:

''தில்லைவாழ் சிவகணச் சிறுமீர்காள் வாரீர்
சீர்மிகு மார்கழி நீராடப் போதுவீர்
அல்லைவீழ்த் தும்அழ குக்கதிர் உதிக்கும்
அம்புவி மகிழும் ஆட்சியுமே சிறக்கும்
தொல்லைபோய் ஒழியும் தூய்மையும்நனி நிறையும்
துலங்கு அருட்சுடா அகத்தினிலே தோனறும்
வல்லையேல் இதுதான வாய்ப்புநல் தோழி
வள்ளல் நடராசனைப பாடேலோ
எம்பாவாய்''

இறையன்பாகள இந்நூலைக் கற்றுப் பயன் அடையலாம்.

அடுத்த இதழில்

கம்பன் கவிநயமணி

**வே. தியாகராஜன்**

அவர்கள் எழுதும்

## ''ஆடல் காணீரோ திருவிளையாடல் காணீரோ''

**கட்டுரைத் தொடர் இடம்பெற இருக்கிறது என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-600034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.,
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600002.











திருவான்மியூர் அருள்மிகு மருந்தீஸ்வரர் ஆலயத்தில் பள்ளி மாணவ மாணவியர்க்கு திருமுறை இசைப்போட்டி நடைபெற்றது. வெற்றிபெற்ற மாணவ மாணவியர்க்கு மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் சிறப்புச் செயலர் திருமிகு கே.ஏ. சுந்தரம் ஐ.ஏ.எஸ். அவர்கள் பரிசு வழங்கினார். அறநிலையத்துறையின் அரசுச் செயலாளர் திருமிகு ஆர்.சண்முக சிகாமணி ஐ.ஏ.எஸ்., வீட்டு வசதித்துறைச் செயலாளர் திருமிகு சி. செல்லப்பன் ஐ.ஏ.எஸ்., அறநிலையத்துறை துணைச் செயலாளர் திருமிகு வேங்கடவரதன் சென்னை துணை ஆணையாளர் திரு கு. சிதம்பரம் பி.ஏ., உதவி ஆணையாளர் திரு ஜி. பக்கிரிசாமி, ஆலயச் செயல் அலுவலர் திரு வெ. சாரங்கபாணி ஆகியோர் பங்கேற்றனர். திருமுறை இன்னிசைத் திலகம் திருமதி சரோஜா சுந்தரம் அவர்களின் திருமுறை இசைக் கச்சேரி சிறப்புற நடைபெற்றது.







காஞ்சிபுரம் அருள்மிகு வரதராசப் பெருமாள் ஆலயத்திற்கு மேதகு குடியரசுத் தலைவர் திருமிகு ஆர். வெங்கட்ராமன் அவர்கள் வருகை புரிந்தபோது ஆணையாளர் திருமிகு வ. ராமதாஸ் ஐ.ஏ.எஸ். அவர்கள் வரவேற்றார். சென்னை துணை ஆணையாளர் திரு கு. சிதம்பரம் பி.ஏ., காஞ்சிபுரம் உதவி ஆணையாளர் திரு ப. ராஜா பி.எஸ்.சி., பி.எல்., ஆலய உதவி ஆணையாளர் திரு சீனிவாசன் ஆகியோர் உடன் உள்ளனர்.